# *அல்லாஹ் உண்மையான ஏக இறைவனா?*

*முஹம்மதுவுக்கு இறைச்செய்தி வரும் விதம்* ;~

(நபியே!) நூஹுக்கும், அவருக்குப் பின் வந்த (இதர) நபிமார்களுக்கும் நாம் வஹீ அறிவித்தது போலவே, உமக்கும் நிச்சயமாக வஹீ அறிவித்தோம்.
......
(அல்குர்ஆன் : 4:163)

அப்படியானால் முஹம்மதுவுக்கு இறைச்செய்தி வந்த விதத்தை முதலில் பார்ப்போம்

1 ;~ மணியோசை

........*'இறைத்தூதர் அவர்களே! தங்களுக்கு இறைச்செய்தி எவ்வாறு வருகிறது?' எனக் கேட்டதற்கு, 'சில வேளைகளில் அது மணி ஓசையைப் போன்று என்னிடம் வரும்*. ...........*(குளிரிலும்) அவர்களின் நெற்றியிலிருந்து வியர்வை சொட்டும்'* என ஆயிஷா(ரலி) கூறினார்.
ஸஹீஹ் புகாரி : 2.
அத்தியாயம் : 1.

*2 ;~ தேனியின் ரீங்காரம்*

அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு வேத அறிவிப்பு அருளப்பெறும்போது ரீங்காரம் போன்ற மெல்லிய ஒலி கேட்கும். .......

அஹ்மது ஹதீஸ் 228

*3 ;~ உடம்பு சாம்பல் நிறமாக மாறுமாம்*

உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்களுக்கு வேதஅறிவிப்பு (வஹீ) அருளப்பெறும்போது, அவர்களுக்கு மிகுந்த சிரமம் ஏற்படும்;அவர்களது முகம் சாம்பல் நிறத்திற்கு மாறிவிடும்.
ஸஹீஹ் முஸ்லிம் : 4660.
அத்தியாயம் : 43. நபிமார்களின் சிறப்புகள்

*4 ;~ முகம் சிவந்து மூச்சு விடுதல்*

...... ( வேத அறிவிப்பு வந்த போது) . நபி (ஸல்) அவர்கள் முகம் சிவந்த நிலையில் குறட்டை விட்ட நிலையில் சிறிது நேரம் காணப்பெற்றார்கள். பிறகு அவர்களைவிட்டு அந்த (சிரம)நிலை விலகியது. ........
ஸஹீஹ் முஸ்லிம் : 2195.
அத்தியாயம் : 15.

*5 ;~ வேத அறிவிப்பு வரும்போது முஹம்மதுவின் உடம்பு மிகவும் பளுவானதாக மாறும்*

அஹ்மது ஹதீஸ் 26294

*6 ;~ ஆயிஷாவின் போர்வையில் இருக்கும் போது தான் வஹி வருமாம்*

உம்மு ஸலமாவே! ஆயிஷாவின் விஷயத்தில் எனக்கு மனவேதனை தராதே. ஏனெனில், அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் அவரல்லாத வேறெந்தப் பெண்ணின் போர்வைக்குள் நான் இருக்கும் போதும் எனக்கு வஹீ (இறைச்செய்தி) அருளப்பட்டதில்லை' என்று பதிலளித்தார்கள்.
ஸஹீஹ் புகாரி : 3775.

இந்த முறையில் பைபிளில் உள்ள தீர்க்கதரிசிகளுக்கு இறைசெய்தி வந்ததா என்று பார்த்தால் இல்லை. அப்படியானால் மணியோசை கேட்கும் விதத்தில் தேனியில் ரீங்காரம் கேட்கும் விதத்தில் உடம்பு சாம்பல் நிறமாக மாறும் விதத்தில் முகம் சிவந்து உடம்பு சிரமப்படும் விதத்தில் ஆயிஷாவின் போர்வையில் இருக்கும் போது மட்டும் விதத்தில் முஹம்மதுவுக்கு வந்த இறைவன் பைபிள் அடிப்படையில் யார் என்று பார்க்க வேண்டும்.

அதற்கு பைபிள் ஒரு அளவுகோலை சொல்கிறது.

9 கிறிஸ்துவின் உபதேசத்திலே நிலைத்திராமல் மீறி நடக்கிற எவனும் தேவனை உடையவனல்ல. கிறிஸ்துவின் உபதேசத்தில் நிலைத்திருக்கிறவனோ பிதாவையும் குமாரனையும் உடையவன்;.
2 யோவான் 1:9

இந்த வசனத்தின் படி இயேசு கிறிஸ்து சொன்ன உபதேசத்தை போதிக்காதவன் உண்மையான தேவனையுடையவன் அல்ல என்று உள்ளது. அப்படியானால் முஹம்மது இயேசுவின் போதனையை போதித்தாரா என்று உதாரணத்திற்கு மூன்று விஷயங்களை பார்ப்போம்

*1 ;~* தேவனை பிதாவே என்று அழைக்க வேண்டும் என்பது இயேசுவின் போதனை மத்தேயு 6;9

இஸ்லாமிய அல்லாஹ்வை பிதாவே என்று அழைக்க கூடாது என்பது இஸ்லாமிய அல்லாஹ்வின் போதனை 19;34, 19;35, 5;18, 43;59

*2 ;~* இயேசு கிறிஸ்து தேவனுடைய குமாரன் என்பது இயேசுவின் போதனை , மத்தேயு 16;16, 17

ஆனால் இயேசு கிறிஸ்து தேவனுடைய குமாரன் இல்லை என்பது இஸ்லாமிய அல்லாஹ்வின் போதனை 19;35

*3 ;~* விபச்சார முகாந்திரத்தினாலொழிய மனைவியை தள்ளிவிடுகிறவன் விபச்சாரம் செய்கிறான் என்பது இயேசுவின் போதனை , மத்தேயு 5 ;32

ஆனால் விபச்சார முகாந்திரம் இல்லாமல் விவாகரத்து செய்ய சொன்ன அல்லாஹ்வின் போதனை 33;37

இவைகளின் படி பார்த்தால் இயேசுவின் உபதேசத்துக்கு நேர் முரணாக போதனை செய்தவர் உண்மையான தேவன் இல்லை. அவன் சாத்தான் ஆவான். அப்போ பைபிள் அடிப்படையில் முஹம்மது சொன்ன காபாவில்

உள்ள குறைஷிகளின் கோத்திர கடவுளாகிய அல்லாஹ் என்பவர் சாத்தான்.

குறைஷிகளுக்கு இருந்த காபா என்னும் விக்கிரக கோவிலில் பல தெய்வங்கள் இருந்தனர். அதில் ஒருவர் தான் இந்த அல்லாஹ் என்ற கடவுள்.

அல்லாஹ்வுக்கு பெண் பிள்ளைகள் இருப்பதாக நம்பினார்கள் ;~ 3;149, 16; 57,58, 53;19-23

அல்லாஹ்வுக்கு ஜின்களுமாக குடும்ப உறவு உள்ளதாக நம்பினார்கள். 37;158

ஜின்களை அல்லாஹ்வுக்கு இணையாக வைத்து நம்பினார்கள் 6;100

அல்லாஹ்வுக்கு இணையான சமமானவர்கள் அல்லாஹ்வை தவிர வேறு இருந்தார்கள் ;~ 41;9 , 2;165, 14;30

இது தான் குறைஷிகளின் நம்பிக்கையாக இருந்தது.

இதை பற்றி குறைஷிகளிடம் கேட்டால் "எங்கள் முன்னோர்களும் இவ்வாறு செய்யவே நாங்கள் கண்டோம்"இவ்வாறு செய்யும்படி அல்லாஹ் எங்களுக்கு கட்டளையிட்டு இருக்கிறான்" என்று சொல்வார்கள். 7;28

உதாரணமாக இந்துக்களுக்கு சிவன் பிரம்மா விஷ்ணு என்ற கடவுள்கள் இருப்பதை போல,,,,,, ஆனால் சிவனுக்கு பிள்ளைகள் இருப்பதாகவும் இந்துக்கள் நம்புகின்றனர்.... இதே போல தான் இங்கேயும்.....

அப்போ குறைஷி மதத்தில் பிள்ளைகள் உள்ளதும் ஜின்களுமாக குடும்ப ஐக்கியம் உள்ளதும் தனக்கு இணையாக பல தெய்வங்கள் இருப்பதுமாக நம்பபட்டு வந்த ஒரு கோத்திர கடவுளை எடுத்து தான் முஹம்மது தன்னுடைய இறைவனாக அறிமுகம் செய்கிறார்...... அப்போ இது முந்தைய தீர்க்கதரிசிகள் வணங்கிய இறைவன் அல்ல, மாறாக குறைஷிகளின் கோத்திர கடவுளாக இருந்தவர் தான் இந்த அல்லாஹ் என்ற கடவுள்.

குறைஷிகளின் கோத்திர கடவுளை தனது இறைவனாக அறிவித்ததுமின்றி அவர்களுடைய வழிபாட்டு முறைகளை தான் உருவாக்கிய மதத்தில் முஹம்மது புகுத்தி இருக்கிறார்

*1 ;~ காபா*

ஆபிரகாம் மோசே போன்றோர் ஆராதித்து வந்த தன்னை பிதா என்று சொல்லிய தேவன் இஸ்ரவேல் ஜனங்களை பார்த்து தேவன் வாசமாய் இருக்கும்படி ஆலயத்தை செய்ய சொல்கிறார். (யாத்திராகமம் 25;8) அது தான் ஆசரிப்பு கூடாரம். பிற்பாடு சாலொமோன் எருசலேமில் அதை ஆலயமாக கட்டினார்..... அதற்கு பிராகாரம் பரிசுத்த ஸ்தலம் மகா பரிசுத்த ஸ்தலம் என்று மூன்று பகுதிகள் உள்ளன. ஆனால் முஹம்மது குறைஷிகளின் விக்கிரக கோவிலாக இருந்த காபாவை தனது மதத்தில் மாற்றினார். காபாவை சுற்றி வருவது இஸ்லாத்துக்கு முன்பே குறைஷிகளின் மத நம்பிக்கை ஆகும். அது இன்றைக்கும் இஸ்லாத்தில் உள்ளது. தேவன் இந்த காபாவை பற்றி எங்கேயுமே சொல்லவில்லை, எந்த ஒரு தீர்க்கதரிசியும் இங்கே வந்து சுற்றவும் இல்லை.

*2 ;~ காபாவின் கருப்பு கல்*

இந்த கருப்பு கல்லுமே குறைஷிகளின் விக்கிரகங்களில் ஒன்றாக தான் காணபட்டது. இதற்கு ஆதாரத்தை பார்ப்போம்.

முஹம்மது தன்னை நபி என்று அறிமுகபடுத்தும் முன்பு காபா என்னும் விக்கிரக கோவிலை புதுப்பித்து கட்டினார்கள். அவ்வாறு கட்டும்போது இந்த அஸ்வத் என்னும் கருப்பு கல்லை வைக்கும் இடத்துக்கு வந்த போது குறைஷியரின் குடும்பத்தினருக்கிடையே "நாங்கள் தான் இதை பிரதிஷ்டை பண்ணுவோம்" என்று சச்சரவு ஏற்பட்டது. கடைசியில் அவர்கள் "நாளை இந்த காபாவில் முதல் நபராக யார் வருகிறார்களோ அவர்களே இந்த கல்லை பிரதிஷ்டை செய்ய வேண்டும் என்று முடிவுக்கு வந்தனர். அடுத்த நாள் முதல் நபராக முஹம்மது வந்தார். இதனால் முஹம்மதுவே இந்த கருப்பு கல்லை காபாவில் பிரதிஷ்டை செய்தார். ( இபின் கதீர் பாகம் 5 பக்கம் 250,251,252, முஸ்னத் அஹ்மத் ஹதீஸ் 14597)

இந்த குறைஷிகளுக்கு கற்களை வணங்கும் முறையும் காணபட்டது.
ஆதாரம் புகாரி 4376

நாங்கள் (அறியாமைக் காலத்தில்) கல்லை வணங்கிக் கொண்டிருந்தோம் (நாங்கள் வணங்கிக் கொண்டிருந்த) ஒரு கல்லைவிடச் சிறந்த மற்றொரு கல்லை நாங்கள் கண்டால் அதை எடுத்துக் கொண்டு பழையதை எறிந்து விடுவோம். கல் ஏதும் எங்களுக்குக் கிடைக்கவில்லையென்றால் நாங்கள் மண் கட்டியைச் சேகரி(த்துக் குவி)ப்போம். பிறகு, ஆட்டைக் கொண்டு வருவோம்; அதன் பாலை (குவிந்து கிடக்கும்) அந்த மண்கட்டியின் மீது கறப்போம்; பிறகு அதைச் சுற்றி வருவோம். ....
ஸஹீஹ் புகாரி : 4376.
அத்தியாயம் : 64. (நபிகளார் காலத்துப்)போர்கள்

இனி இந்த கல்லை முஹம்மது மூலம் இஸ்லாமிய இறைவனாகிய அல்லாஹ் அல்லது பைபிள் அடிப்படையில் சைத்தான் தயாரித்த மதத்தில் எப்படிபட்ட நம்பிக்கைகளை புகுத்தி மாற்றினார் என்று பார்ப்போம்

சுவனத்திலிருந்து வந்த கல் . அது இறக்கபட்ட போது பாலை போல வெண்மையாக இருந்தது. மனிதர்களின் பாவத்தால் கறுத்து விட்டது.

Thirmithi hadith 877

கருப்பு கல்லை தொடுவது பாவங்களின் பரிகாரமாகும்.

திர்மிதி ஹதீஸ் 959, Ahmad (2796)

மறுமை நாளில் இந்த கல் இரண்டு கண்களை உடையதாகவும் நாக்கு உடையதாகவும் வந்து தன்னை தொட்டவருக்காக சாட்சியமளிக்கும்

திர்மிதி ஹதீஸ் 961

இப்படிபட்ட நம்பிக்கைகளை புகுத்தி இந்த கருப்பு கல்லை இஸ்லாமாக மாற்றினார்.

நாம் பைபிளில் பார்க்கும் போது எபேசு பட்டணத்திலும் வானத்திலிருந்து சிலை விழுந்ததாக நம்பியிருந்தனர் ;~

35 பட்டணத்துச் சம்பிரதியானவன் ஜனங்களை அமர்த்தி; எபேசியரே, எபேசியருடைய பட்டணம் மகா தேவியாகிய தியானாளுக்கும் வானத்திலிருந்து விழுந்த சிலைக்கும் கோவிற்பரிசாரகியாயிருக்கிறதை அறியாதவன் உண்டோ?

அப்போஸ்தலர் 19

வானத்திலிருந்து கல் விழுந்தது, வானத்திலிருந்து சிலை விழுந்து என்பதெல்லாம் அவரவர் மதத்திலுள்ள நம்பிக்கைகள் ஆகும்.... ஆனால் இப்படி ஒரு நம்பிக்கையை மோசேயோ இயேசுவோ வேறு எந்த தீர்க்கதரிசிகளுமோ சொல்லவில்லை . ஆக இது உண்மையான இறைவனிடமிருந்து வராத மார்க்கமாகும்.

*3 ;~ அறியாமை கால நோன்பு இஸ்லாத்தில்*

ஆயிஷா(ரலி) அறிவித்தார்.
ஆஷூரா (முஹர்ரம் 10-ம் நாள் என்பது அறியாமைக் காலத்தில் குறைஷிகள் நோன்பு நோற்கிற நாளாக இருந்து வந்தது. நபி(ஸல்) அவர்களும் அந்த நாளில் நோன்பு நோற்று வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்குச் சென்றபோது அந்த நாளில் தாமும் நோன்பு நோற்று, நோன்பு நோற்கும் படி (முஸ்லிம்களுக்கும்) உத்தரவிட்டார்கள். ரமளான் (நோன்பின் கட்டளை) வந்தபோது ஆஷூரா தினம், விரும்பியவர்கள் நோன்பு நோற்கவும் செய்யலாம்; விரும்பாதவர்கள் நோன்பு நோற்காமலும் இருக்கலாம் என்ற நிலைக்கு வந்துவிட்டது.
ஸஹீஹ் புகாரி : 3831.
அத்தியாயம் : 63. அன்சாரிகளின் சிறப்புகள்

*4 ;~ இத்திகாப்*

அறியாமை காலத்தில் உமர் கஅபாவின் (புனிதமான மசூதியில்) ஒரு இரவையோ அல்லது ஒரு பகலையோ பக்தியுடன் கழிப்பதாக உறுதிமொழி எடுத்தார். அதை பற்றி உமர் முஹம்மதுவிடம் கேட்ட போது அந்த இத்திகாப் நோன்பை செய்யும்படி அனுமதி கொடுத்தார்.

Sunan Abi Dawud 2474

*5 ;~ அகீகா பலி*

அறியாமை காலத்தில் நாங்கள் குழந்தை பிறந்தால் ஒரு ஆட்டை பலியிட்டு அதின் இரத்தத்தை குழந்தையின் தலையில் பூசிக்கொள்வோம். ஆனால் அல்லாஹ் இஸ்லாத்தை கொண்டு வந்த போது ஒரு ஆட்டை பலியிட்டு, தலையை மொட்டையடித்து, தலையில் குங்குமப்பூ பூசினோம்.

Sunan Abi Dawud 2843

*6 ;~ அதிரா பலி*

முஹம்மதுவிடம் ஒரு மனிதர் கேட்டார் ; இஸ்லாத்திற்கு முந்தைய நாட்களில் ரஜப் காலத்தில் அதிரா பலி செய்வோம். எனவே நீங்கள் எங்களுக்கு என்ன கட்டளையிடுகிறீர்கள் ?. அல்லாஹ்வின் தூதர் கூறினார் ; எந்த மாதத்திலும் அல்லாஹ்வுக்காக பலி செய்யுங்கள்;

Sunan Abi Dawud 2830

*7 ;~ சபா மர்வா குன்றுகளுக்கிடையே உள்ள ஓட்டம்*

ஆஸிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.
'ஸஃபா, மர்வாவுக்கிடையே ஓடுவதை நீங்கள் வெறுக்கக் கூடியவர்களாக இருந்தீர்களா?' என நான் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர், 'ஆம்! ஏனெனில் (திருக்குர்ஆன் 02:158) வசனம் அருளப்படும் வரை அவ்விரண்டும் (எங்கள் பழைய நம்பிக்கைப்படி) அறியாமைக் காலச் சின்னங்களாகவே இருந்தன' எனக் கூறினார்.
ஸஹீஹ் புகாரி : 1648.
அத்தியாயம் : 25. ஹஜ்

இந்த ஓட்டம் அறியாமை காலத்தில் அதாவது இஸ்லாத்துக்கு முன்பு மனாத் சிலைக்காக ஓடுவதாக காண பட்டது. ஆனால் முஹம்மது வந்ததும் அது ஹாஜ்ரா தண்ணீருக்காக ஓடினார் என்று சொல்லி அதை மாற்றி இஸ்லாத்துக்குள் நுழைத்து விட்டார். புகாரி 1643

*அறியாமை காலம்*

இந்த அறியாமை காலத்தில் அவர்கள் செய்த பேகன் வழிபாட்டு முறைகளையெல்லாம் முஹம்மதுவால் தயாரிக்கபட்ட இஸ்லாம் மதத்துக்குள் சிலவற்றை சிறிது வித்தியாசபடுத்தி புகுத்தபட்டதை பார்த்தோம்... இனி ஒருவேளை முஹம்மதுவுக்கு முன்பு ஏதாவது தீர்க்கதரிசிகள் வந்து இந்த வழிபாட்டு முறைகளை குறைஷிகளின் முன்னோர்களுக்கு கற்று கொடுத்து இருந்தார்களா என்று ஆராய வேண்டும்...... அப்படி ஆராயும்போது முஹம்மது இஸ்மவேல் சந்ததியில் வந்த நபி என்று ஒரு ஹதீஸை இஸ்லாமியர்கள் மேற்கோள் காட்டுவார்கள். இப்றாஹீம் வந்து காபாவை கட்டியதாகவும் இந்த குறைஷி சமூகத்துக்கு இஸ்மவேல் நபியாக வந்ததாகவும் சொல்வார்கள்... ஆனால் இது குர்ஆனுக்கு முரணானதாகும்.

கீழே உள்ள வசனங்கள் ;~

அன்றி, (தூர் ஸீனாய் என்னும் மலைக்கு மூஸாவை) நாம் அழைத்த பொழுது (அந்தத்) தூர் (என்னும்) மலையின் சார்பிலும் நீங்கள் இருக்கவில்லை. எனினும், உங்களுக்கு முன்னர் நம்முடைய யாதொரு தூதருமே வராத (இந்த) மக்களுக்கு நீங்கள் அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும் பொருட்டே உங்கள் இறைவனின் அருளால் (இவ்விஷயம் உங்களுக்கு அறிவிக்கப்பட்டது.) அவர்கள் (இதைக்கொண்டு) நல்லுணர்ச்சி பெறுவார்களாக!
(அல்குர்ஆன் : 28:46)

(நமது நபி) "இதனை(த் தாமாகவே) கற்பனை செய்து கொண்டார்" என்று (உங்களைப் பற்றி) அவர்கள் கூறுகின்றனரா? அவ்வாறன்று. இது உங்களது இறைவனால் உங்களுக்கு அருளப்பட்ட உண்மையான வேதமாகும். உங்களுக்கு முன்னர் இதுவரையில் யாதொரு தூதருமே வராதிருந்த (இந்த அரபி) மக்களுக்கு நீங்கள் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காகவே (இவ்வேதம் அருளப்பட்டுள்ளது. இதனைப் பின்பற்றி) அவர்கள் நேரான வழியில் செல்வார்களாக!
(அல்குர்ஆன் : 32:3)

(நபியே! இதற்கு முன்னர்) நாம் (உங்களை நிராகரிக்கும் அரபிகளாகிய) இவர்களுக்கு, இவர்கள் ஓதக்கூடிய யாதொரு வேதத்தையும் கொடுக்கவும் இல்லை; அச்சமூட்டி எச்சரிக்கக்கூடிய யாதொரு தூதரையும் உங்களுக்கு முன்னர் நாம் அவர்களிடம் அனுப்பவுமில்லை. (இவ்வாறிருந்தும் அவர்கள் நிராகரிக்கின்றனர்.)
(அல்குர்ஆன் : 34:44)

(உங்களுடைய) இந்த மக்களின் மூதாதைகளுக்கு (யாதொரு தூதராலும்) எச்சரிக்கை செய்யப்படாததால் (மறுமையைப் பற்றி) முற்றிலும் கவலையற்று இருக்கின்றனர். இவர்களுக்கு நீங்கள் அச்சமூட்டி எச்சரிக்கை செய்யுங்கள்.
(அல்குர்ஆன் : 36:6)

*அஹத்* ;~

இஸ்லாமியர்கள் தங்கள் ஓரிறைக் கொள்கையை நிரூபிக்க முக்கியமாக மேற்கோள் காட்டும் அத்தியாயம் 112 ஆகும். அதில் உள்ள முதலாவது வசனத்தை பார்ப்போம் ;~

நபியே?!) நீர் கூறுவீராக: அல்லாஹ் அவன் ஒருவனே. 112;1

இந்த வசனத்தின் அரபி மூலத்தில் "ஒருவனே" என்ற தமிழாக்கம் செய்யப்பட்ட வார்த்தை "ஒருவனே" என்ற அரபி வார்த்தையில்லை, அது " அஹத் - பலரில் ஒருவன் - One of" என்ற பொருள்படும் வார்த்தையாகும்.உண்மையில் அஹத் என்ற வார்த்தை, அல்லாஹ்வை பலரோடு ஒப்பிட்டு, பலரில் அல்லாஹ்வும் ஒருவன் என்ற பொருளில் தான் அமைந்துள்ளது.

ஒருவேளை அல்லாஹ் இதனை சரியான முறையில் அரபியில் சொல்லவேண்டுமென்றால், "அல்லாஹு அல் அஹத்" அதாவது "அவன் அல்லாஹ், அவன் ஒருவனே" என்று சொல்லியிருந்தால் பிரச்சனை இல்லை.

ஒருவன் மட்டுமே( only one) என்பதற்கு அரபி மொழியில் வாஹித் என்ற அரபு வார்த்தை உள்ளது.  ஆதாரமாக 2;133, 2;163, 5;73, 6;19 ஆகிய இடங்களில் பார்க்கலாம்.

அஹத் என்ற வார்த்தை குர்ஆனில் அனைத்து இடங்களிலும் (74), "பலரில் ஒருவர், உங்களில் ஒருவர், "  "யாராகிலும்" என்ற பொருளில் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது.

உதாரணமாக ;~

2;96 ;~ அவர்களில் ஒவ்வொருவரும்

2;102 ;~ அவர்கள் எவருக்கும்

2;136 ;~ ஒருவருக்கிடையேயும்

2;285 ;~எவர் ஒருவரையும்

3;73 ;~ இன்னொருவருக்கும்

இன்னும் நிறைய இடங்களில் பார்க்கலாம்.  இதை பற்றி இஸ்லாமிய அறிஞர் மவுதூதி தன்னுடைய தப்ஸீரில் 112;1 ஆம் வசனத்தின் விளக்கத்தில் சொல்லும் போது ;~

"முதலில் புரிந்து கொள்ள வேண்டிய விஷயம் என்னவென்றால், இந்த வாக்கியத்தில் "அஹதுன்" என்ற சொல் வழக்கத்திற்கு மாறான பயன்பாடு ஆகும். வழக்கமாக இந்த வார்த்தை "வாரத்தின் முதல் நாள்", "என்னிடம் யாரும் வரவில்லை", "உன்னுடன் யாராவது இருக்கிறார்களா?", " யாராவது உங்களிடம் வந்தால்" இவ்வாறாக தான் பயன்படுத்த பட்டது. இந்த பயன்பாடுகளைத் தவிர, குர்ஆனுக்கு முந்தைய அரபியில் வெறும் அஹத் என்ற சொல் ஒரு நபர் அல்லது பொருளுக்கான பெயரடையாகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம் என்பதற்கு எந்த முன்னுதாரணமும் இல்லை. குர்ஆன் அருளப்பட்ட பிறகு இந்த வார்த்தை அல்லாஹ்வுக்காக மட்டுமே பயன்படுத்தப்பட்டது, வேறு யாருக்கும் பயன்படுத்தப்படவில்லை.

மேலே மவ்தூதி தன்னுடைய தப்ஸீரில் சொன்னதை பார்த்தோம். குர்ஆன் இறக்கபடும் காலத்தில் இந்த அஹத் என்ற சொல் பலரில் ஒன்று என்ற அர்த்தத்தில் தான் இறக்கபட்டது. பிற்பாடு இந்த வசனம் இறக்கபட்ட பிறகு இதனுடைய அர்த்தத்தை இஸ்லாமியர்கள் மாற்றினார்கள் என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். காரணம் என்னவென்றால் குர்ஆனில் அஹத் என்ற சொல் எங்கே யெல்லாம் வருகிறதோ அங்கே எல்லாமே   பன்மையில் தான் வருகிறது.

https://www.answering-islam.org/tamil/authors/sam-shamoun/allah_ahad_q112.html

*அல்லாஹ் தேவையற்றவனா* ?

அல்லாஹ் எந்த தேவையும் இல்லாதவன் என்று சொல்லி கீழே உள்ள வசனத்தை மேற்கோள் காட்டுவார்கள்.

(அந்த) அல்லாஹ் (எவருடைய) தேவையுமற்றவன். (அனைத்தும் அவன் அருளையே எதிர்பார்த்திருக்கின்றன.)
(அல்குர்ஆன் : 112:2)

ஆனால் நாம் குர்ஆனில் பார்க்கும் போது அல்லாஹ்வுக்கு தேவை உள்ளது என்பதை அறிய முடியும்.

அல்லாஹ்வுக்கு யார் உதவி செய்கிறாரோ அவருக்கு நிச்சயமாக அல்லாஹ்வும் உதவி செய்கின்றான். நிச்சயமாக அல்லாஹ் மிகப் பலவானும், அனைவரையும் மிகைத்தவனாகவும் இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 22:40)

நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவி புரிந்தால், அவனும் உங்களுக்கு உதவி புரிந்து உங்களுடைய பாதங்களை உறுதியாக்கி விடுவான்.
(அல்குர்ஆன் : 47:7)

அல்லாஹ்வைக் (கண்ணால்) காணாமலேயே (அவனை நம்பிக்கை கொண்டு) இதன் மூலம் அவனுக்கும், அவனுடைய தூதருக்கும் உதவி

செய்பவர்கள் யார் என்பதை அல்லாஹ் (சோதித்து) அறிந்துகொள்கின்றான். நிச்சயமாக அல்லாஹ் பலசாலியும் (அனைவரையும்) மிகைத்தவனுமாக இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 57:25)

இந்த வசனங்களில் அல்லாஹ்வுக்கு உதவி தேவை என்பது உறுதி. இது மனிதர்களுக்கு செய்யும் உதவி என்று சிலர் வியாக்கியானம் செய்வார்கள். ஆனால் மனிதர்களுக்கு செய்யும் உதவி அல்லாஹ்வுக்கு தான் செய்வதாக எப்படி மாறும் ? காரணம் மனிதர்களை அல்லாஹ் வெறும் அடிமையாக தான் அல்லாஹ் பார்க்கிறான். அது தவறான வியாக்கியானம் ஆகும்.

*தேவை இல்லாதவனுக்கு எதற்கு சிங்காசனம்* ;~

.........
.......அப்போது நான் மூஸா(அலை) அவர்களுக்கு அருகே இருப்பேன். அவர்கள் அர்ஷின் கால்களில் ஒரு காலைப் பிடித்தபடி (நின்று) இருப்பார்கள். .....,....
ஸஹீஹ் புகாரி : 3398.
அத்தியாயம் : 60. நபிமார்களின் செய்திகள்

...................நம் இறைவன் ஒரு விஷயத்தைத் தீர்மானித்துவிட்டால், அரியணையை (அர்ஷ்) சுமக்கும் வானவர்கள் இறைவனை(ப் போற்றி)த் துதிக்கின்றனர்................ ,...................அரியணையைச் சுமக்கும் வானவர்களுக்கு அருகிலிருப்பவர்கள், அரியணையைச் சுமக்கும் வானவர்களிடம், "உங்கள் இறைவன் என்ன சொன்னான்?" என்று வினவுகின்றனர். அதற்கு அரியணையைச் சுமக்கும் வானவர்கள் இறைவன் என்ன சொன்னான் என்பதை அவர்களிடம் தெரிவிக்கின்றனர்.......................,...
ஸஹீஹ் முஸ்லிம் : 4487.
அத்தியாயம் : 39. முகமன் (சலாம்)

அர்ஷை சுமந்து கொண்டிருப்பவர்களும், .........!
(அல்குர்ஆன் : 40:7)

இன்னும் மலக்குகள் அதன் கோடியிலிருப்பார்கள்; அன்றியும், அந்நாளில் உம்முடைய இறைவனின் அர்ஷை (வானவர்) எட்டுப்பேர் தம் மேல் சுமந்திருப்பார்கள்.
(அல்குர்ஆன் : 69:17)

இன்னும் அல்லாஹ்வுக்கு கடன் தேவைபடுகிறது ;~ 2:245, 5:12 57:11 57:18 64:17 73:20

*பரிந்துரை செய்யும் அல்லாஹ்* ;~

பரிந்துரை என்னும் தலைப்பில் குர்ஆனில் பார்த்தால் குர்ஆனில் முரண்பாடாகவே உள்ளது. அதை கீழே வரிசையாக பார்க்கலாம்.முதலாவதாக எந்த பரிந்துரையும் இல்லை என்ற குர்ஆன் வசனங்களை பாருங்கள்.

*எந்த பரிந்துரையும் ஏற்றுக்கொள்ளபடாது* ;~

இன்னும், ஒர் ஆத்மா மற்றோர் ஆத்மாவிற்கு சிறிதும் பயன்பட முடியாதே (அந்த) ஒரு நாளை நீங்கள் அஞ்சி நடப்பீர்களாக! (அந்த நாளில்) எந்தப் பரிந்துரையும் அதற்காக ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது; அதற்காக எந்தப் பதிலீடும் பெற்றுக் கொள்ளப்பட மாட்டாது; அன்றியும் (பாவம் செய்த) அவர்கள் உதவி செய்யப்படவும் மாட்டார்கள்.
(அல்குர்ஆன் : 2:48)

இன்னும், (வரப் போகும்) அந்நாளிலிருந்து, உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்; அன்று ஓர் ஆத்மா பிறிதோர் ஆத்மாவுக்கு உதவி செய்ய இயலாது; அதனிடமிருந்து (அதன் பாவங்களுக்குப் பரிகாரமாக) எந்த நஷ்ட ஈடும் ஒப்புக்கொள்ளப்பட மாட்டாது; எந்த சிபாரிசும் அதற்கு பலனளிக்காது; இவர்கள்(எவர் மூலமாகவும் எந்த) உதவியும் செய்யப்பட மாட்டார்கள்.
(அல்குர்ஆன் : 2:123)

நம்பிக்கை கொண்டோரே! பேரங்களும், நட்புறவுகளும், பரிந்துரைகளும் இல்லாத அந்த(இறுதித் தீர்ப்பு) நாள் வருவதற்கு முன்னர், நாம் உங்களுக்கு

அளித்தவற்றிலிருந்து (நல்வழிகளில்) செலவு செய்யுங்கள்; இன்னும், கா..பிர்களாக இருக்கின்றார்களே அவர்கள் தாம் அநியாயக்காரர்கள்.
(அல்குர்ஆன் : 2:254)

*இனி இதற்கு முரணாக பரிந்துரை யாளர்கள் உண்டு என்று குர்ஆனில்* ;~

..,.....அவனுடைய அனுமதிக்குப் பின்னரேயன்றி (அவனிடம்) பரிந்து பேசுபவர் எவருமில்லை. இத்தகைய (மாட்சிமை மிக்க) அல்லாஹ்வே உங்களைப் படைத்துப் பரிபக்குவப் படுத்துபவன், ஆகவே அவனையே வணங்குங்கள்; (நல்லுணர்ச்சி பெற இவை பற்றி) நீங்கள் சிந்திக்க வேண்டாமா?
(அல்குர்ஆன் : 10:3)

அந்நாளில் அர்ரஹ்மான் எவரை அனுமதித்து, எவருடைய பேச்சை உவந்து கொள்கிறானோ, அவர்களைத் தவிர வேறு எவருடைய ஷ..பாஅத்தும் (பரிந்துரையும்) பலனளிக்காது.
(அல்குர்ஆன் : 20:109)

அன்றியும், அவன் எவருக்கு அனுமதி கொடுக்கிறானோ அவருக்குத் தவிர, அவனிடத்தில் எந்த பரிந்துரையும் பயனளிக்காது; எனவே (நியாய விசாரணைக்கு நிற்கும்) அவர்களின் இருதயங்களிலிருந்து திடுக்கம் நீக்கப்படுமானால் “உங்கள் இறைவன் என்ன கூறினான்” என்று கேட்பார்கள். “உண்மையானதையே! மேலும், அவனே மிக்க உயர்ந்தவன் மகாப்பெரியவன்” என்று கூறுவார்கள்.
(அல்குர்ஆன் : 34:23)

அன்றியும் வானங்களில் எத்தனை மலக்குகள் இருக்கின்றனர்? எனினும், அல்லாஹ் விரும்பி, எவரைப்பற்றித் திருப்தியடைந்து, அவன் அனுமதி கொடுக்கின்றானோ அவரைத் தவிர வேறெவரின் பரிந்துரையும் எந்தப் பயனுமளிக்காது.
(அல்குர்ஆன் : 53:26)

*இனி இதற்கு முரணாக அல்லாஹ் மட்டுமே பரிந்துரை செய்வானாம்* ;~

இன்னும் எவர் தங்கள் இறைவன் முன் (மறுமையில்) கொண்டு வரப்படுவது பற்றி பயப்படுகிறார்களோ அவர்களுக்கு (இவ்வேதத்தைக் கொண்டு) எச்சரிக்கை செய்யும் - (பாவத்திலிருந்து நீங்கி) அவர்கள் பயபக்தியுடையோராகும் பொருட்டு; அவனைத் தவிர அவர்களுக்குப் பாதுகாப்பளிப்பவரோ, பரிந்து பேசுபவரோ வேறு யாரும் இல்லை.
(அல்குர்ஆன் : 6:51)

(நபியே!) யார் தங்கள் மார்க்கத்தை விளையாட்டாகவும் வெறும் வேடிக்கையாகவும் எடுத்துக் கொண்டார்களோ, இன்னும் யாரை இவ்வுலக வாழ்க்கை ஏமாற்றி விட்டதோ அவர்களை விட்டுவிடும். எனினும் அவர்களுக்கு ஒவ்வோர் ஆன்மாவும் தான் செய்த செயல்களின் காரணமாக ஆபத்தில் சிக்கிக்கொள்ளும் (எனும் உண்மையை) குர்ஆனைக் கொண்டு நினைவுறுத்தும். அந்த ஆத்மாவுக்கு அல்லாஹ்வைத்தவிர வேறு பாதுகாவலரோ, பரிந்து பேசுபவரோ இல்லை; (தாங்கள் செய்த பாவத்திற்கு) ஈடாக (தங்களால் இயன்ற) அத்தனையும் கொடுத்தாலும், அது அவர்களிடமிருந்து ஒப்புக்கொள்ளப் பட மாட்டாது; இவர்கள் தாங்கள் செய்த செய்கைகளாலேயே தங்களை நாசமாக்கிக் கொண்டார்கள்; இவர்கள் நிராகரித்துக் கொண்டிருந்த காரணத்தால் இவர்களுக்குக் கொதிக்கும் நீரும் துன்புறுத்தும் வேதனையும் உண்டு.
(அல்குர்ஆன் : 6:70)

அல்லாஹ் தான் வானங்களையும், பூமியையும், இவ்விரண்டிற்கும் இடையிலிருப்பவற்றையும் ஆறு நாட்களில் படைத்துப்பின் அர்ஷின் மீது அமைந்தான்; அவனையன்றி உங்களுக்கு உதவியாளரோ, பரிந்து பேசுபவரோ இல்லை. எனவே (இவற்றையெல்லாம்) நீங்கள் (நினைத்து) சிந்திக்க வேண்டாமா?
(அல்குர்ஆன் : 32:4)

மேலே உள்ள இந்த வசனங்களில் முதலில் பரிந்துரையே இல்லை என்றும், பிற்பாடு அல்லாஹ்வின் அனுமதியை கொண்டு சிலர் பரிந்துரை செய்வார்கள் என்றும் பிற்பாடு அதற்கும் முரணாக அல்லாஹ் மட்டுமே

பரிந்துரை செய்வான் என்றும் உள்ளது.  சரி நாம் இங்கே குறிப்பாக அல்லாஹ்வின் பரிந்துரையை மட்டும் பார்க்கலாம்.

அல்லாஹ் பரிந்துரை செய்கிறான் என்று சொல்லும் போது "இது அப்படியல்ல, அல்லாஹ் அனுமதி கொடுத்தவர்கள் பரிந்துரை செய்த பின்னர் அல்லாஹ் "எனது பரிந்துரை மட்டுமே எஞ்சியிருக்கிறது" என்று சொல்லி விட்டு நகரிலிருந்து ஒரு கைப்பிடி மக்களை அள்ளியெடுத்து வெளியேற்றுவான். இந்த செயலை தான் அல்லாஹ் தன்னுடைய பரிந்துரை என்று சொல்கிறான்" என்று இஸ்லாமியர்கள் சொல்வார்கள். இந்த சம்பவம் புகாரி 7439 ல் உள்ளது.

இவர்கள் மேற்கோள் காட்டும் இந்த சம்பவத்தில் உள்ள செய்தியை கொஞ்சம் ஆராய்வோம்.

நரகம் வழியாக செல்லும் பாலம் வழியாக நகரிலிருந்து  தப்பித்தவர்கள் தங்கள் சகோதரர்களுக்காக பரிந்துரை செய்கிறார்கள். அப்போது ஒரு தீனார் அளவுக்கு நம்பிக்கை கொண்டவர்களை நரகத்திலிருந்து விடுதலை செய்ய பரிந்துரை செய்தவர்களுக்கு அனுமதி கொடுக்கிறான். அவர்கள் விடுதலை செய்த பிறகு மீண்டும் இதே போல பரிந்துரை செய்கிறார்கள். அப்போது மீண்டும் ஒரு தீனார் அளவுக்கு நம்பிக்கை உள்ளவர்களை விடுதலை செய்ய அனுமதி கொடுக்கிறான்.  இவ்வாறு தொடர்ந்து அல்லது மூன்று முறை நடக்கின்றது.  இவ்வாறு *வானவர் மற்றும் இறைத்தூதர்கள்* பரிந்துரை செய்வார்கள். பின்னர் கடைசியாக எனது பரிந்துரை என்று அல்லாஹ் சொல்லி விட்டு நகரிலிருந்து ஒரு கைப்பிடி மக்களை அள்ளியெடுத்து வெளியேற்றுவான்.

இது தான் அந்த ஹதீஸில் உள்ளது. இந்த ஹதீஸில் உள்ள ஒரு முரணை முதலாவது  பார்ப்போம்.

புகாரி 4712, 7440, இன்னும் சில ஹதீஸ்களில் மறுமை நாளில் மக்கள் முதலாவது ஆதமிடம் சென்று எங்களுக்காக பரிந்துரை செய்யுங்கள் என்று சொல்வார்கள். ஆனால் ஆதம் அதை மறுத்து விடுவார். பின்பு நூஹிடம் சொல்லுவார்கள். நூஹும் மறுத்து விடுவார். இவ்வாறு ஒவ்வொரு இறைத்தூதர்களிடமும் சென்று கடைசியாக முஹம்மது நபியிடம்

வருவார்கள். முஹம்மது நபி தான் பரிந்துரை செய்வார். அவர் பரிந்துரை செய்து நகரிலிருந்து மக்களை வெளியேற்றுவார். இவ்வாறு மூன்று முறை பரிந்துரை செய்து மக்களை நகரிலிருந்து வெளியேற்றுவார். கடைசியில் நிரந்தர நரகம் விதியாக்கபட்டவர்களை தவிர எல்லோருமே முஹம்மதுவின் மூன்று நேர பரிந்துரையில் வெளியே வந்து விடுவார்கள். இவ்வாறு சொல்ல பட்டிருக்கும் போது இறைநம்பிக்கையாளர்கள் பரிந்துரை செய்வார்கள் என்பது முழக்க முழுக்க முரணாக செய்தி ஆகும். இங்கே இறைநம்பிக்கையாளர்களோ இறைதூதர்களோ பரிந்துரை செய்ய மாட்டார்கள். முஹம்மது மட்டுமே பரிந்துரை செய்கிறார்.

இன்னும் பரிந்துரை செய்யும் அந்தஸ்து மற்ற இறைத்தூதர்களுக்கு கொடுக்க படவில்லை. அது முஹம்மது நபிக்கு மட்டுமே கொடுக்கபட்டுள்ளது. ஆதாரமாக கீழே உள்ள ஹதீஸை பாருங்கள்

'எனக்கு முன்னர் யாருக்கும் கொடுக்கப்படாத ஐந்து விஷயங்கள் எனக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. ....,.....(மறுமையில்) சிபாரிசு செய்யும் வாய்ப்புக் கொடுக்கப்பட்டுள்ளேன். ....,..
ஸஹீஹ் புகாரி : 335.
அத்தியாயம் : 7. தயம்மும்

பரிந்துரை என்பது முஹம்மது நபிக்கு மட்டுமே கொடுக்கபட்ட அந்தஸ்து ஆகும். அப்படி இருக்கும் போது ஏனைய இறைதூர்கள் பரிந்துரை செய்வார்கள் என்பது முழுக்க முழுக்க முரண்பாடு ஆகும்.

சரி இனி பரிந்துரை என்பதை எதன் அடிப்படையில் அல்லாஹ் கூறுகின்றான் என்று பார்ப்போம்.

அவர்கள் அல்லாஹ் அல்லாதவற்றை(த் தங்களுக்குப்) பரிந்து பேசுபவர்களாக எடுத்துக் கொண்டார்களா? (நபியே!) கூறுவீராக! “அவை எந்த சக்தியையும், அறிவையும் பெறாமல் இருந்த போதிலுமா?” (என்று.) (அல்குர்ஆன் : 39:43)

“பரிந்து பேசுதல் எல்லாம், அல்லாஹ்வுக்கே உரியது; வானங்களுடையவும், பூமியுடையவும் ஆட்சி அவனுக்கே உரியது; பின்னர் அவனிடமே நீங்கள் மீட்டப்படுவீர்கள்” என்று (நபியே!) நீர் கூறுவீராக!

(அல்குர்ஆன் : 39:44)

அல்லாஹ் அல்லாதவற்றை குறைஷிகள் பரிந்துரை செய்பவர்களாக எடுத்து இருந்தார்கள். அதற்காக காரணமாக அவர்கள் சொல்வதை கீழே பாருங்கள்

.....,எவர்கள் அல்லாஹ் அல்லாதவைகளை, தங்களுக்குப் பாதுகாவலாக எடுத்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்கள், "அத்தெய்வங்கள் எங்களை அல்லாஹ்வுக்கு மிக்க சமீபமாக்கி வைக்கும் என்பதற்காகவேயன்றி நாம் இவைகளை வணங்கவில்லை" (என்று கூறுகின்றனர்). அவர்கள் ..........
(அல்குர்ஆன் : 39:3)

அல்லாஹ்விடம் தங்களை கொண்டுசொல்லும்படி அல்லாஹ் அல்லாதவற்றை பரிந்துரையாளர்களாக எடுத்து இருந்தார்கள். இந்த காண்டெஸ்ட் அடிப்படையில் தான் பார்க்க பரிந்துரை என்று அல்லாஹ் சொல்வதை பார்க்க வேண்டும்.

இப்போது 39;43, 44 ஆகிய வசனங்களில் "அவைகள் பரிந்துரைக்காது என்றும் அவைகளுக்கு எந்த சக்தியும் இல்லை என்றும் பரிந்துரை முழுவதும் அல்லாஹ்வுக்கே உரியது என்றும் கூறுகிறான்.

இரண்டாது இவர்கள் மேற்கோள் காட்டும் ஹதீஸில் கடைசியில் தனது பரிந்துரை என்று சொல்லி விட்டு நகரிலிருந்து வெளியேற்றுகிறான் என்றால் அல்லாஹ்வும் மற்றவர்களை போல பரிந்துரை செய்து விட்டு விடுதலை செய்கிறான் என்று அர்த்தம். காரணம் குர்ஆனில் அல்லாஹ் பரிந்துரை செய்வதாக தெளிவாக சொல்லி விட்டான். மற்றவர்களும் முஹம்மதுவும் பரிந்துரை செய்து விட்டு தான் நரகிலிருந்து மக்களை வெளியேற்றுகிறார்கள். அவர்கள் நரகிலிருந்து மக்களை வெளியேற்றுவதை பரிந்துரை என்று சொல்ல முடியாது. மாறாக அவர்கள் பரிந்துரை செய்ததை தான் பரிந்துரை என்று சொல்கிறோம். அதே போல அல்லாஹ் "இனி எனது பரிந்துரை" என்று சொன்னால் அல்லாஹ் பரிந்துரை செய்து விட்டு மக்களை வெளியேற்றுவதை தான் காட்டுகிறது.

*அல்லாஹ் ஜெபம் செய்கிறான்* ;~

அல்லாஹ் தன்னை ஜெபம் செய்கிறவனாக குர்ஆனில் பல இடங்களில் சொல்கிறான். 2;157, 33;43, 33;56. ஆனால் அதை மறைக்கும் விதமாக இஸ்லாமியர்கள் மொழிபெயர்க்கும்போது "அருள்" என்று மாற்றி மொழிபெயர்க்கிறார்கள். அல்லாஹ் தன்னை ஜெபிக்கிறதாக சொல்லும் வார்த்தை "ஸலா" என்பதாகும். குர்ஆனில் இந்த வார்த்தை எங்கேயெல்லாம் வருகிறதோ எங்கேயெல்லாம் ஜெபம் என்னும் அர்த்தத்தில் தான் உள்ளது. ஆனால் அல்லாஹ்வுக்கு மட்டும் ஆசீர்வாதம் என்று தவறாக மொழிபெயர்க்கிறார்கள். சரி அல்லாஹ் தன்னை ஜெபிக்கிறதாக சொல்லும் வசனங்களையும் உண்மையில் இஸ்லாமியர்களின் மொழிபெயர்ப்பு சரியா என்பதையும் பார்க்கலாம்.

1 ;~

*இத்தகையோர் மீது தான் அவர்களுடைய இறைவனின் நல்லாசியும்,* ❌ ( ṣalawātun) ( *ஜெபங்களும்* ) *நற்கிருபையும் உண்டாகின்றன, இன்னும் இவர்கள் தாம் நேர் வழியை அடைந்தவர்கள்.*
(**அல்குர்ஆன்** : 2:157)

2 ;~ 33:56

முதலாவது இஸ்லாமியர்களின் மொழிபெயர்ப்பை பார்ப்போம் ;~

இந்த நபியின் மீது அல்லாஹ் அருள் புரிகிறான். மலக்குகளும் அவருக்காக அருளைத் தேடுகின்றனர். மு.ஃமின்களே நீங்களும் அவர் மீது ஸலவாத்து சொல்லி அவர் மீது ஸலாமும் சொல்லுங்கள்.
(**அல்குர்ஆன்** : 33:56)

இனி அரபியில் எப்படி உள்ளது என்று என்று பார்ப்போம் ;~

33 உண்மையில் அல்லாஹ் மற்றும் அவரது தூதர்களும் நபியின் மீது பிரார்த்தனை செய்கிறார்கள். ...... 33;56

இங்கே இஸ்லாமியர்களின் மொழிபெயர்ப்பு பித்தலாட்டத்தை தெளிவாக பார்க்க முடிகிறது. எப்படியென்றால் அரபியில் "அல்லாஹ்வும் அவரது தூதர்களும் சேர்ந்து செய்கிறார்கள்" என்று உள்ளதை முஸ்லிம்கள்

மொழிபெயர்க்கும்போது அல்லாஹ்வையும் மலக்குகளையும் பிரித்து தனி தனியாக மொழிபெயர்த்து அல்லாஹ்வுக்கு யஸல்லூனா என்பதற்கு தனி அர்த்தமும் யஸ்ஸல்லூனா என்பதற்கு மலக்குகளுக்கு தனி அர்த்தமும் கொடுக்குகிறார்கள். ஆனால் இங்கே அல்லாஹ்வும் மலக்குகளும் சேர்ந்து ஜெபம் செய்வதாக குர்ஆனில் உள்ளது. ஏன் இதை இஸ்லாமியர்கள் தவறான முறையில் மொழிபெயர்ப்பு செய்கிறார்கள் என்றால் அல்லாஹ் ஜெபம் செய்கிறான் என்பது தெரிந்து விடும் என்பதற்க்காகவே. உண்மையில் மலக்குகள் அருள்புரிய வேண்டிய அவசியம் இல்லை. காரணம் அவைகளுக்கு அருள் புரியவேண்டிய சக்தி இல்லை இஸ்லாத்தின் அடிப்படையில். ஆக அல்லாஹ் இங்கே தெளிவாக தன்னை ஜெபம் செய்கிறவனாக அறிமுகபடுத்துகிறான்.

3 ;~ 33:43

முதலாவது இஸ்லாமியர்களின் மொழிபெயர்ப்பை பார்ப்போம் ;~

உங்களை இருளிலிருந்து வெளியேற்றி ஒளியின் பால் கொண்டுவருவதற்காக உங்கள் மீது அருள்புரிகிறவன் அவனே; இன்னும் அவனுடைய மலக்குகளும் அவ்வாறே (பிரார்த்திக்கின்றனர்;) .....,......
(அல்குர்ஆன் : 33:43)

அரபியில் உள்ள உண்மையான மொழிபெயர்ப்பு ;~

உங்களை இருளிலிருந்து வெளியேற்றி ஒளியின் பால் கொண்டுவருவதற்காக அவனும் அவனுடைய மலக்குகளும் உங்கள் மீது ஜெபம் செய்கிறார்கள் ...........
(அல்குர்ஆன் : 33:43)

இந்த வசனத்திலும் அருள் என்ற அரபு வார்த்தைக்கு குர்ஆனில் "யுஸல்லி" என்று அதாவது ஜெபம் என்று தான் உள்ளது. குர்ஆனில் ஜகரியா பிரார்த்தனை செய்தை பற்றி உள்ளது.

அவர் தம் அறையில் நின்று தொழுது ( யுஸல்லி) கொண்டிருந்தபோது, ........
(அல்குர்ஆன் : 3:39)

இங்கேயும் அதே வார்த்தை தான் வந்துள்ளது. உண்மையில் ஆசீர்வாதம் என்பதற்கு பரக்கத் என்ற தனி வார்த்தை உள்ளது. இந்த குர்ஆனை பற்றி குர்ஆன் என்ன சொல்கிறது என்று பாருங்கள்.

(நபியே!) அச்சமூட்டி எச்சரிப்பவராக நீர் இருப்பதற்காக (இதை) உம் இதயத்தின் மீது (இவ்வேதத்தை இறக்கினார்) -
(அல்குர்ஆன் : 26:194)

தெளிவான அரபி மொழியில்.
(அல்குர்ஆன் : 26:195)

இங்கே தெளிவான அரபு மொழியில் தான் இந்த குர்ஆன் இறக்கபட்டதாக சொல்கிறது. அவ்வாறு இருக்க சலா என்று வந்தால் அது தெளிவான அரபு மொழியில் ஜெபம் என்று தான் அர்த்தம். குர்ஆன் சொல்லும் விதியின் அடிப்படையில் தான் நாம் இதை புரிந்து கொள்ள வேண்டும். அப்படி பார்க்கும் போது அல்லாஹ் ஜெபிக்கிறான் என்பது மிக தெளிவாக புரிந்து கொள்ள முடிகிறது.

அல்லாஹ்வின் தூதர் கூறினார்கள் ; நிச்சயமாக அல்லாஹ் அவனுடைய மலக்குகள், வானங்களிலும் பூமியிலும் வசிப்பவர்கள், பொந்தில் உள்ள எறும்பு கூட, மீன் கூட மக்களுக்கு நன்மை செய்யக் கற்றுக் கொடுப்பவர் மீது ஸலாத் சொல்லுகிறார்கள்.

திர்மிதி ஹதீஸ் 2685

இதே ஹதீஸ் இன்னொரு இடத்திலும் உள்ளது. ;~

அல்லாஹ்வும், அவனது வானவர்களும், வானத்திலும் பூமியிலும் வசிப்பவர்களும், பொந்தில் உள்ள எறும்பும், (தண்ணீரில்) உள்ள மீன்களும் கூட மக்களுக்கு அறிவைப் போதிப்பவருக்காக மன்றாடுகின்றன. ( supplicate)

Riyad as-Salihin 1387

படைப்பினங்களுடன் சேர்த்து இங்கு அல்லாஹ் சலா அதாவது ஜெபம் செய்வதாக சொல்ல படுகிறது. குர்ஆனில் கூட அல்லாஹ் ஜெபம் செய்யும் வசனங்கள் உள்ளன

முதலாவது அதிகாரம் முழுவதும் உதாரணமாக ;~

(இறைவா!)உன்னையே நாங்கள் வணங்குகிறோம்; உன்னிடமே நாங்கள் உதவியும் தேடுகிறோம்.
(அல்குர்ஆன் : 1:5)

நீ எங்களை நேர்வழியில் நடத்துவாயாக!
(அல்குர்ஆன் : 1:6)

இதை நாம் மேற்கோள் காட்டும்போது இஸ்லாமியர்கள் வழக்கமாக சொல்வது என்னவென்றால் இது முஸ்லிம்கள் எப்படி ஜெபிக்க வேண்டும் என்று கற்று கொடுப்பது ஆகும். இது அல்லாஹ் செய்யும் ஜெபம் இல்லை " இவ்வாறு சொல்வார்கள். ஆனால் நாம் இங்கே கவனிக்க வேண்டியது என்னவென்றால் உண்மையில் அல்லாஹ் அவ்வாறு சொல்லிகொடுப்பது தான் என்றால் "நபியே நீர் கூறுவீராக குன்" என்று தான் ஆரம்பிப்பான். அவ்வாறு சொல்வது தான் மக்களுக்கு எடுத்து சொல்வது. ஆனால் இங்கே அவ்வாறு இல்லை. அப்படியானால் இது அல்லாஹ் ஜெபிக்கும் ஜெபம் என்பது தெளிவு..... இதை மனிதர்களும் ஜெபிக்க வேண்டும் என்று அர்த்தம்.

*அல்லாஹ்வின் அநந்தர பாத்தியம்* ;~

.........; வானங்கள், பூமி ஆகியவற்றில் (இருக்கும் அனைத்துக்கும்) அனந்தர பாத்தியதை அல்லாஹ்வுக்கே உரியதாகும். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றையெல்லாம் அறிகிறான்.
(அல்குர்ஆன் : 3:180)

அன்றியும் அல்லாஹ்வின் பாதையில் நீங்கள் செலவு செய்யாதிருக்க உங்களுக்கு என்ன நேர்ந்தது? வானங்கள், பூமியிலுள்ளவற்றின் அனந்தர பாத்தியதை அல்லாஹ்வுடையதே! .,...,....,.....
(அல்குர்ஆன் : 57:10)

அனந்தர பாத்தியம் என்பது நமது மூதாதையர்களுடைய சொத்து ஆகும்.... அப்படியானால் அல்லாஹ் இங்கே தனக்கும் அனந்தர பாத்தியம் உள்ளதாக சொல்கிறான்.... அப்படியானால் கேள்வி என்னவென்றால் அல்லாஹ்வின் மூதாதையர்கள் யார் என்பதே...... அல்லாஹ்வுக்கு மூதாதையர்கள் உள்ளார்கள் என்பது திண்ணம். இதை கேட்கும் போது 112:3 ஐ மேற்கோள் காட்டி அல்லாஹ் பெறப்படவில்லை என்று சொல்வார்கள். ஆனால் அல்லாஹ் பெறபட்டானா என்று நாம் கேட்கவில்லை. அல்லாஹ்வுக்கு மூதாதையர்கள் உள்ளார்கள் என்பதை இங்கே தெளிவாக சொல்லிவிட்டான். அவ்வாறு இருக்கும் போது அந்த மூதாதையர்கள் யார் என்பது தான் கேள்வி

*அல்லாஹ் சொல்லும் அவன் யார்* ;~

ஆகவே, நீங்கள் அல்லாஹ்வின் மீதும், அவன் தூதர் மீதும், நாம் இறக்கி வைத்த (வேதமாகிய) ஒளியின் மீதும் ஈமான் கொள்ளுங்கள் - அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கு தெரிந்தே இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 64:8)

குர்ஆனில் உள்ள எல்லா வசனங்களும் அல்லாஹ்வின் வார்த்தைகள் ஆகும் என்பது தான் இஸ்லாமிய நம்பிக்கை. இதன் அடிப்படையில் இந்த வசனத்தை அணுகுவோம்.

*இங்கு பேசுகிறவர் சொல்கிறார்; நீங்கள் அல்லாஹ்விடமும் அவருடைய தூதரிடமும் 👉 நாம் 👈 இறக்கி வைத்த ஒளியின் மீதும் ஈமான் கொள்ள வேண்டுமாம். அல்லாஹ் தன்னை மூன்றாவது நபராக பாவித்து பேசினால் "நாம்" என்று சொல்ல முடியாது. ஆக இந்த வசனத்தில் அல்லாஹ் மற்றும் முஹம்மது மற்றும் இந்த வசனத்தை பேச கூடிய மூன்றாவது ஒருவர் உள்ளார் என்பது திண்ணம். அவர் யார் என்பதே கேள்வி*

அடுத்து ;~

அவனே வானத்திலிருந்து மழையை இறக்கினான். அதைக் கொண்டு எல்லா வகையான புற்பூண்டுகளையும் நாம் வெளியாக்கினோம்; .........
(அல்குர்ஆன் : 6:99)

அவன் எனக்கு 10 ரூபாய் தந்தான். அதை கொண்டு நான் மிட்டாய் வாங்கினேன். என்றால் இங்கே இரண்டு பேர் உள்ளார்கள் என்பது மிகவும் தெளிவான செய்தி. அதே போல் தான் அவன் இறக்கிய மழையை கொண்டு நாம் புல் பூண்டுகளை வெளியாக்கினோம் என்றால் இங்கே இரண்டு பேர் உள்ளார்கள் என்பது மிக தெளிவான விளக்கம் விஷயம் ஆகும்.

அடுத்து ;~

"அல்லாஹ் அல்லாதவனையா (தீர்ப்பளிக்கும்) நீதிபதியாக நான் தேடுவேன்? அவன்தான் உங்களுக்கு (விரிவான) விளக்கமான வேதத்தை இறக்கியுள்ளான்; எவர்களுக்கு நாம் வேதத்தைக் கொடுத்திருக்கின்றோமோ அவர்கள் நிச்சயமாக இது (குர்ஆன்) உம்முடைய இறைவனிடமிருந்து உண்மையாக இறக்கப்பட்டுள்ளது என்பதை நன்கு அறிவார்கள். எனவே நீர் சந்தேகம் கொள்பவர்களில் ஒருவராகி விடாதீர்.
(அல்குர்ஆன் : 6:114)

இங்கே ஆரம்பத்தில் உள்ளது முஹம்மதுவிடம் அல்லாஹ் சொல்ல சொன்னது ஆகும் என்று எடுக்க முடியாது. காரணம் அவ்வாறு சொல்ல சொல்லியிருந்தால் "குன்" என்ற வார்த்தை வர வேண்டும். உதாரணமாக 67;3, 112;1, 62:6, 49:16 ஆகிய இடங்களில் அல்லாஹ் நபியிடம் கூறும் படி சொல்லி ஆரம்பிக்கிறான். ஆனால் இங்கே அல்லாஹ் அவ்வாறு சொல்லவில்லை. அப்போ இங்கே கேள்வி எழுகிறதுஎழுகிறது. இந்த வசனத்தில் முதலில் பேசுபவர் யார்?

அடுத்தது ;~

நீங்கள் சிந்தித்து நல்லுணர்வு பெறுவதற்காக ஒவ்வொரு பொருளையும் ஜோடி ஜோடியாக நாம் படைத்தோம்.
(அல்குர்ஆன் : 51:49)

ஆகவே, அல்லாஹ்வின் பக்கம் விரைந்து செல்லுங்கள்; நிச்சயமாக, நான் அவனிடமிருந்து உங்களுக்குத் தெளிவாக அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவனாகவே இருக்கின்றேன் (என்று நபியே! நீர் கூறுவீராக).

(அல்குர்ஆன் : 51:50)

இந்த வசனத்தில் உள்ள அவன் யார்?

இவைகளை நாம் மேற்கோள் காட்டும் போது இதை இலக்கியநடை கவிதை நடை என்று இஸ்லாமியர்கள் சொல்வார்கள். அப்படி சொன்னால் அதற்க்கூரிய மறுப்பு ;~

*குர்ஆன் ஒரு கவிதை நடை உள்ள புத்தகமா ?*

(நபியே!) அவர்கள் அறிந்து நல்லுணர்ச்சி பெறும் பொருட்டே இவ்வேதத்தை நாம் *உங்களுடைய மொழியில் எளிதாக்கி வைத்தோம்.*
(அல்குர்ஆன் : 44:58)

குரானை மிக எளிதாக்கி வைத்ததாக அல்லாஹ் சொல்கிறான்

(நபியே!) *உங்களுடைய மொழியில் நாம் இதை (இறக்கி) எளிதாக்கி வைத்ததெல்லாம்,* இதன்மூலம் நீங்கள் இறை அச்சமுடையவர்களுக்கு நற்செய்தி கூறுவதற்கும், (வீண்) விதண்டாவாதம் செய்யும் மக்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காகவுமே.
(அல்குர்ஆன் : 19:97)

இந்த வசனத்திலும் அரபு மொழியில் மக்கள் புரிந்து கொள்ளும் விதத்தில் எளிதாக்கி தந்து இருகிறதாக தான் அல்லாஹ் சொல்கிறான்......அதாவது அவன் என்றும் நான் என்றும் சொல்லி விட்டு அப்பறம் அந்த அவன் நான் தான் என்று வளைத்து புரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை....

அன்றி, (அல்லாஹ்வுக்கு) அவர்கள் பயந்து *கொள்வதற்காக கோணலற்ற இக்குர்ஆனை(த் தெளிவான) அரபி மொழியில் இறக்கி வைத்தோம்.*
(அல்குர்ஆன் : 39:28)

இந்த குரானில் உள்ள வசனங்களை நாமாக கோட்டி எடுத்து அர்த்தம் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை......

*இது ஒரு கவிதை புத்தகமும் அல்ல*

(நம்முடைய தூதராகிய) அவருக்கு நாம் கவி கூறக் கற்றுக் கொடுக்கவில்லை. அது அவருக்குத் தகுமானதும் அல்ல; இது (நன்மை தீமைகளைத்) தெளிவாக்கக்கூடிய குர்ஆனும் நல்லுபதேசத்தையும் தவிர வேறில்லை.
(அல்குர்ஆன் : 36:69)

இதன் ibn kathir tafsir ;~

*அல்லாஹ் அவனது தூதருக்கு கவிதை கற்பிப்பதில்லை*

(மேலும் நாம் அவருக்கு கவிதை கற்பிக்கவில்லை, அது அவருக்கு ஏற்றது அல்ல.) அல்லாஹ் தனது நபி முஹம்மதுக்கு கவிதை கற்பிக்கவில்லை என்று கூறுகிறான்

(அவருக்கும் அது பொருந்தாது.)என்பதின் அர்த்தம் ; அவருக்கு அதை இயற்றத் தெரியாது, அவருக்குப் பிடிக்கவில்லை, அதில் அவருக்கு இயல்பான நாட்டம் இல்லை. சரியான மீட்டர் அல்லது ரைம் கொண்ட கவிதையின் rhyme( ரசத்தை)அவர் ஒருபோதும் மனப்பாடம் செய்யவில்லை ..

குரைஷிகளில் உள்ள கா ஃபிர்கள் கூறியது போல் இது கவிதை அல்ல; (தெளிவான குர்ஆன் மட்டுமே.) அதாவது ; அதன் அர்த்தங்களைச் சிந்தித்துப் புரிந்துகொள்பவருக்கு அது தெளிவாகவும் சுய விளக்கமாகவும் இருக்கிறது.

கவிஞர்களை வழிகெட்டவர்கள்தாம் பின்பற்றுகின்றனர்.
(அல்குர்ஆன் : 26:224)

*அல்லாஹ்வின் உடம்பு அழியும்* ;~

முதலில் அல்லாஹ்வுக்கு உருவம் உள்ளது என்பதை பார்க்கலாம் ;~

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
உங்களில் ஒருவர் தம் சகோதரரிடம் சண்டையிட்டால், முகத்தில் அடிப்பதைத் தவிர்க்கட்டும். ஏனெனில், அல்லாஹ் (முதல் மனிதர்) ஆதமைத் தனது உருவத்திலேயே படைத்தான்.
ஸஹீஹ் முஸ்லிம் : 5093.

1 ;~ ஆதமுக்கும் அல்லாஹ்வுக்கும் 60 முழ நீளம் = புகாரி 6227, முஸ்லிம் 5463

2 ;~ அல்லாஹ்வுக்கு கைகள் உண்டு = 38;75

3 ;~ அல்லாஹ்வுக்கு வாய் உண்டு = 7;143

4 ;~ அல்லாஹ்வுக்கு சிங்காசனம் உண்டு = 20:5, 23: 16, புகாரி 2789, 3398

5 ;~ வழக்கமாக அல்லாஹ் யாரைபோலவும் இல்லை என்பதால் அவன் எப்படி இருப்பான் என்று யாருக்கும் தெரியாது என்று இஸ்லாமியர்கள் சொல்வார்கள். ஆனால் அதனுடைய உண்மையான அர்த்தம் என்னவென்றால் நசாய் ஹதீஸ் 5379 ல் அல்லாஹ்வின் இரண்டு கைகளும் வலது பக்கத்தில் உள்ளது என்று உள்ளது..... இதை தான் அது குறிக்கிறது. காரணம் இரண்டு கைகள் வலது பக்கத்தில் உள்ளதாக யாருமே இல்லை.

சரி அல்லாஹ்வுக்கு உருவம் உள்ளது என்பதை தெளிவாக பார்த்து விட்டோம். அப்படியானால் அவருடைய முகத்தை தவிர மீதம் எல்லாமே அழியுமாம். 28:88..... அப்படியானால் அல்லாஹ்வின் உடம்பு அழிவுள்ளது.....

ஆனால் இயேசு கிறிஸ்து அழிவில்லாதவர் ;~

27 என் ஆத்துமாவைப் பாதாளத்தில்விடீர், உம்முடைய பரிசுத்தர் அழிவைக்காணவொட்டீர்.
அப்போஸ்தலர் 2:27

31 அவன் கிறிஸ்துவினுடைய ஆத்துமா பாதாளத்திலே விடப்படுவதில்லையென்றும், அவருடைய மாம்சம் அழிவைக் காண்பதில்லையென்றும் முன்னறிந்து, அவர் உயிர்த்தெழுதலைக் குறித்து இப்படிச் சொன்னான்.
அப்போஸ்தலர் 2:31

32 இந்த இயேசுவைத் தேவன் எழுப்பினார், இதற்கு நாங்களெல்லாரும் சாட்சிகளாயிருக்கிறோம்.
அப்போஸ்தலர் 2:32

மேலும் அல்லாஹ்வை மறுமையில் பார்க்கலாம் ;~ புகாரி 806, 7436, 7437

மேலும் அல்லாஹ் எல்லா இடங்களிலும் நிரம்பி இருக்கிறான் ;~

........அறிந்து கொள்க: நிச்சயமாக அவன் எல்லாப் பொருட்களையும் சூழ்ந்து இருக்கிறான்.
(அல்குர்ஆன் : 41:54)

*அல்லாஹ் படைப்பினங்களை படைக்கும் முன்* ;~

அல்லாஹ் படைப்பினங்களை படைக்கும் முன்பு இரண்டு காரியங்கள் அல்லாஹ்வுடன் இருந்தது என்று பார்க்க முடியும்

1 ;~ புத்தகம்

அல்லாஹ்வின் தூதர் கூறினார் ; அல்லாஹ் படைப்பினங்களை படைப்பதற்கு முன்பு ஒரு புத்தகத்தில் எழுதினார்

புகாரி 7553

இந்த ஹதீஸில் அல்லாஹ் படைப்பினங்களை படைக்கும் முன்பு புத்தகத்தில் எழுதினார் என்று தெளிவாக உள்ளது. இதை நாம் வாதமாக வைக்கும் போது அல்லாஹ் முதல் படைத்தது பேனா. அப்படி இருக்கும்போது பேனா இல்லாமல் புத்தகத்தில் எப்படி எழுத முடியும் என்று கேட்பார்கள். இதற்கு ரொம்ப எளிதான பதில் தான். என்னவென்றால் அல்லாஹ்வுக்கு பேனா இல்லாமலும் எழுத முடியும் என்பது தான்

இஸ்லாமிய நம்பிக்கை. அவ்வளவு தான். அப்படி இருக்கும் போது பேனாவையும் படைக்கும் முன்பு புத்தகத்தில் எழுதினார் என்று இந்த ஹதீஸ் தெளிவாக உள்ளது. அப்படியானால் அல்லாஹ் ஒருவன் அல்ல, மாறாக அல்லாஹ்வுடன் படைக்கபடாத புத்தகமும் உள்ளது என்பது திண்ணம்.

2 ;~ மேகம்

நம் இறைவன் படைப்பைப் படைப்பதற்கு முன் எங்கே இருந்தான்?' என்று அல்லாஹ்வின் தூதரிடம் கேட்கபட்டது. அதற்கு அவர் : மேகங்கள் மேலே இருந்தார்.

திர்மிதி ஹதீஸ் 3109

படைப்பினங்களை படைக்கும் முன்பு அல்லாஹ் மேகங்களுக்கு மேலே இருந்ததாக இந்த ஹதீஸ் தெளிவாக சொல்கிறது. அப்படியானால் அல்லாஹ்வுடன் படைக்கபடாத மேகமும் உள்ளது. அல்லாஹ் ஒருவன் அல்ல என்பது திண்ணம்

*அல்லாஹ்வின் ஒளியின் உவமை* ;~

குரானில் அல்லாஹ் தன்னை ஒளி என்று அறிமுக படுத்துகிறான். தன்னை ஒளி என்று சொல்வது மட்டுமில்லாது அந்த ஒளிக்கு உவமையையும் சொல்கிறான். அதை கீழே உள்ள வசனத்தில் பாருங்கள் ;~

அல்லாஹ் வானங்கள் பூமிக்கு ஒளி (ஏற்படுத்துபவன்) அவன் (ஏற்படுத்தும்) ஒளிக்கு உவமை விளக்கு வைக்கப்பட்டுள்ள மாடம் போன்றதாகும். அவ்விளக்கு ஒரு கண்ணாடி(க் குவி)யில் இருக்கிறது; அக் கண்ணாடி ஒளிவீசும் நட்சத்திரத்தைப் போன்றதாகும். அது பாக்கியம் பெற்ற ஜைத்தூன் மரத்தி(ன் எண்ணெயி)னால் எறிக்கப் படுகிறது. அது கீழ்த்திசையை சேர்ந்ததுமன்று; மேல்திசையை சேர்ந்ததுமன்று. அதனை நெருப்புத் தீண்டாவிடினும், அதன் எண்ணெய் ஒளி வீச முற்படும், (இவை எல்லாம் சேர்ந்து) ஒளி மேல் ஒளியாகும். ............
(அல்குர்ஆன் : 24:35)

அல்லாஹ் தனது ஒளிக்கு கொடுக்கும் உவமை என்னவென்றால்  ஒரு விளக்கு கண்ணாடி குவியில் உள்ளது. அந்த விளக்கு ஜைத்தூன் மரத்தின் எண்ணெயால் எரிகிறது.  இப்போது கேள்வி என்னவென்றால்

1 ;~ அந்த கண்ணாடி குவி யார்?

2 ;~ அந்த விளக்கு யார்?

3 ;~ அந்த எண்ணெய் யார்

4 ;~ அந்த எண்ணெய் எடுக்கபடும் மரம் யார்?

பிரகாசம் மட்டுமே அல்லாஹ்.....

இந்த வசனத்தில் மிக தெளிவாக அல்லாஹ் ஒருவன் இல்லை என்பதையும் அவன் சுயமாக பிரகாசிக்க சக்தி இல்லாதவன் என்பதையும் பார்க்க முடியும். இந்த கேள்வியை கேட்கும் போது இஸ்லாமியர்கள் ஏதாவது உவமையை எடுத்து பதில் சொன்னால் அதுவும் குர்ஆன் அடிப்படையில் தவறு ஆகும். ஏன் என்றால் கீழே உள்ள வசனத்தை பாருங்கள் ;~

ஆகவே நீங்கள் அல்லாஹ்வுக்கு உதாரணங்களை கூறாதீர்கள்; நிச்சயமாக அல்லாஹ்தான் (யாவற்றையும் நன்கு) அறிபவன்; ஆனால் நீங்கள் அறிய மாட்டீர்கள்.
(அல்குர்ஆன் : 16:74)

இங்கே அல்லாஹ்வுக்கு உவமையை கூற கூடாது என்று அல்லாஹ் கட்டளையாகவே சொல்கிறான்.  ஆக நமது கேள்விக்கு இஸ்லாமியர்கள் நேரடியாக பதில் சொல்லும் படி கட்டாயபடுத்தபடுகிறார்கள்

*முஹம்மது அல்லாஹ்வை விட பெரியவர்* ;~

இஸ்லாமியர்கள் குர்ஆனில் அறிவியல் உள்ளது என்று அதிகமாக மேற்கோள் காட்ட கூடிய ஒரு வசனம் உள்ளது. அதை கீழே பாருங்கள்.

“ஏழு வானங்களையும் அல்லாஹ் அடுக்கடுக்காய் எப்படிப் படைத்திருக்கின்றான் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா,
(அல்குர்ஆன் : 71:15)

“இன்னும் அவற்றில் சந்திரனைப் பிரகாசமாகவும், சூரியனை ஒளிவிளக்காகவும் அவனே ஆக்கியிருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 71:16)

இதில் "சூரியனை ஒளிவிளக்காகவும்" என்ற இடத்தில் சிராஜ் என்ற அரபு வார்த்தை உள்ளது. "சந்திரனை பிரகாசமாகவும்" என்ற இடத்தில் நூர் என்றும் உள்ளது.

சிராஜ் என்றால் சுயமாக பிரகாசிக்க கூடியது என்றும் நூர் என்றால் இன்னொன்றிலிருந்து பிரகாசத்தை உட்கொண்டு பிரதிபலிப்பது ஆகும். இதன் அடிப்படையில் சந்திரன் ஒளியை உட்கொண்டு பிரதிபலிப்பது என்று குர்ஆன் அறிவியலுக்கு முன்பே சொன்னது என்று பெருமை பாராட்டி கொள்வார்கள்.

ஆகையால் இதே அளவுகோலை வைத்து அல்லாஹ்வை பற்றியும் முஹம்மதுவை பற்றியும் குர்ஆனில் என்ன சொல்லபட்டு உள்ளது என்று பார்ப்போம்.

அல்லாஹ் வானங்கள் பூமிக்கு ஒளி (ஏற்படுத்துபவன்) ......,.
(அல்குர்ஆன் : 24:35)

இங்கே அல்லாஹ்வுடைய ஒளிக்கு அரபில் நூர் என்று தான் உள்ளது. அப்போது இஸ்லாமியர்களின் வாதத்தின் அடிப்படையில் அல்லாஹ் சுயமாக பிரகாசிக்க கூடியவன் அல்ல. மாறாக இன்னொன்றிலிருந்து ஒளியை பெற்று கொண்டு பிரதிபலிக்க கூடியனவாக இருக்கிறான்.

சரி, சூரியன் கொடுக்கும் ஒளிக்கு அரபியில் சிராஜ் என்று பயன்படுத்தப்பட்ட வார்த்தை முஹம்மதுவுக்கு பயன்படுத்தபட்டுள்ளது.

இன்னும் அல்லாஹ்வின் பால் (மனிதர்களை) - அவன் அனுமதிப்படி - அழைப்பவராகவும்; பிரகாசிக்கும் விளக்காகவும் ( سِرَاجًا) (உம்மை அனுப்பியுள்ளோம்.)
(அல்குர்ஆன் : 33:46)

அப்போ குர்ஆன் அடிப்படையில் முஹம்மது சுயமாக பிரகாசிக்க கூடியவர் ஆவர். ஆனால் அல்லாஹ் சுயமாக பிரகாசிக்காமல் யாரிடமோ ஒளியை பெற்று பிரதிபலிக்கிறார். இப்போ சூரியனுக்கும் சந்திரனுக்கும் தொடர்பு உள்ளது என்று நமக்கு தெரியும். அதே போல் முஹம்மதுவுக்கும் அல்லாஹ்வுக்கும் தொடர்பு உள்ளதாகவும் குர்ஆன் அடிப்படையில் பார்க்கலாம். அப்படியானால் முஹம்மதுவிடம் இருந்து ஒளியை பெற்று கொண்டு அல்லாஹ் அதை பிரதிபலிக்கிறான் என்று தான் அனுமானிக்க முடிகிறது.

இதற்கு இஸ்லாமியர்கள் ஒருவேளை அல்லாஹ்வுக்கு வரும் போது நாம் அவ்வாறு அர்த்தம் எடுக்க கூடாது என்று சொல்லலாம்..... ஆனால் நமது கேள்வி என்னவென்றால் அல்லாஹ் ஏன் சுயமாக பிரகாசிக்க கூடிய ஒளியின் அர்த்தத்தை முஹம்மதுவுக்கும் பிரதிபலிக்கும் ஒளிக்கு பயன்படுத்தும் வார்த்தையை தனக்கும் பயன்படுத்தி இருக்கிறான்? ..... அல்லாஹ்வுக்கு அரபு மொழி தெரியாமல் போனதா?

ஆக அல்லாஹ்வை விட சுயமாக ஒளி கொடுக்கும் முஹம்மது குர்ஆன் அடிப்படையில் பெரியவராக தெரிகிறார்.

*அறியாமை உள்ள அல்லாஹ்* ;~

குர்ஆன் ஹதீஸ் அடிப்படையில் அல்லாஹ்வுக்கு அறியாமை உள்ளதை நாம் பார்க்க முடியும்.

1 ;~ எப்படி வசனத்தை இறக்க வேண்டும் என்று தெரியாத அல்லாஹ்

பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"இறைநம்பிக்கையாளர்களில் (போருக்குச் செல்லாமல் வீட்டில்) தங்கிவிடுவோரும் அல்லாஹ்வின் பாதையில் தம் செல்வங்களாலும்

உயிர்களாலும் அறப்போர் புரிவோரும் சமமாக மாட்டார்" (4:95) எனும் இந்த இறைவசனம் அருளப்பெற்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்களிடம் அகலமான எலும்பு ஒன்றைக் கொண்டுவரச் சொன்னார்கள். அவ்வாறே அவர்கள் எலும்பைக் கொண்டுவந்து அந்த வசனத்தை எழுதிக் கொண்டார்கள்.
அப்போது (அங்கிருந்த கண் பார்வையற்ற) அப்துல்லாஹ் பின் உம்மி மக்த்தூம் (ரலி) அவர்கள், தமது (கண் பார்வையற்ற) குறை குறித்து முறையிட்டார்கள். அப்போது, "இறை நம்பிக்கையாளர்களில் தக்க காரணமின்றி (போருக்குச் செல்லாமல் வீட்டில்) தங்கி விடுவோரும்..." என்ற (விதிவிலக்குடன் கூடிய) முழு வசனம் அருளப்பெற்றது.
இந்த (4:95ஆவது) வசனம் தொடர்பாக ஸைத் பின் ஸாபித் (ரலி) அவர்களும் பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் கூறியதைப் போன்றே அறிவித்துள்ளார்கள்.
இந்த ஹதீஸ் பராஉ (ரலி) மற்றும் ஸைத் பின் ஸாபித் (ரலி) ஆகியோர் வழியாக மொத்தம் நான்கு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
ஸஹீஹ் முஸ்லிம் : 3854.
அத்தியாயம் : 33. ஆட்சியதிகாரம்

இங்கு 4;95 ஆவது வசனம் இறங்கிய போது ஸைது பின் ஸாபித்திடம் அகலமான எலும்பை கொண்டு வர சொல்லி அதில் எழுதினார்கள். அப்போது ஒரு பார்வையற்றவர் தனது குறைபாட்டை எடுத்து செல்லும்போது இறக்கிய வசனத்தில் அல்லாஹ் திருத்தத்தை செய்கிறார். சர்வ ஞானியாகிய அல்லாஹ்வுக்கு குருடன் இப்படி வந்து கேட்பான் என்று ஏன் தெரியவில்லை?

இதற்கு சில இஸ்லாமியர்கள் சொல்வது என்னவென்றால் இவ்வாறு தான் இந்த வசனம் இறக்கபட வேண்டும் என்று அல்லாஹ் ஏற்கெனவே முடிவு செய்தார். அதினால் தான் இவ்வாறு இறக்கபட்டது என்று சொல்வார்கள். இது எப்படி உள்ளது என்றால் ஒருவன் கீழே விழுந்த பின் அவன் விழுந்ததை மறைக்க நீச்சல் அடிப்பது போல வேஷம் போட்டானாம். அதே கதை தான் இங்கேயும் உள்ளது. நமது கேள்வி என்னவென்றால் அல்லாஹ் ஒரு மனிதனாக வருவதே இழுக்கு என்று இஸ்லாமியர்கள் சொல்கிறார்கள்.அப்படி இருக்கும் போது தன்னை

அறியாமை உள்ளவராக காட்டும்படிக்கு ஏறக்கவே அல்லாஹ் முடிவு செய்து விட்டானா என்பதே. அப்படியானால் இது எப்படி பட்ட இழுக்காக இருக்க முடியும்.

2 ;~ மூஸாவுக்கு தெரிந்தது அல்லாஹ்வுக்கு தெரியவில்லையா?

முஹம்மது மிராஜ் பயணம் செய்து தொழுகை குறித்த கட்டளையை அல்லாஹ்விடமிருந்து வாங்கி வருவதை ஹதீஸில் பார்க்கலாம் ;~

வந்தான். அப்போது அல்லாஹ் நபி(ஸல்) அவர்களுக்கு அறிவித்தவற்றில், 'நாள் ஒன்றுக்கு ஐம்பது நேரத் தொழுகைகள் உங்கள் சமுதாயத்தார் மீது (கடமையாக்கப்பட்டு) உள்ளது' என்பதும் அடங்கும். பிறகு நபி(ஸல்) அவர்கள் (அங்கிருந்து) இறங்கி மூஸா(அலை) அவர்களிடம் வந்து சேர்ந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களைத் தடுத்து நிறுத்திய மூஸா(அலை) அவர்கள், 'முஹம்மதே! உங்களுடைய இறைவன் உங்களிடம் என்ன உறுதிமொழி வாங்கினான்?' என்று கேட்டான்.
நபி(ஸல்) அவர்கள், 'நாள் ஒன்றுக்கு ஐம்பது நேரத் தொழுகைகளை (நான் கட்டாயம் தொழ வேண்டுமென) அவன் என்னிடம் உறுதிமொழி வாங்கினான்' என்று பதிலளித்தார்கள். மூஸா(அலை) அவர்கள், 'உங்கள் சமுதாயத்தாரால் அதை நிறைவேற்ற முடியாது. எனவே, நீங்கள் திரும்பிச் சென்று, உங்களுடைய இறைவனிடம் உங்களுக்கும் (உங்கள் சமுதாயத்தாரான) அவர்களுக்கும் (தொழுகைகளின் எண்ணிக்கையை) குறைக்குமாறு கேளுங்கள்' என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் அது தொடர்பாக ஆலோசனை கேட்பதைப் போன்று ஜிப்ரீல்(அலை) அவர்களைத் திரும்பிப் பார்த்தார்கள்.
'நீர் விரும்பினால் ஆகட்டும்' என்று கூறுவதைப் போன்று ஜிப்ரீல்(அலை) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் சைகை செய்தார்கள்.
எனவே, நபி(ஸல்) அவர்களுடன் ஜிப்ரீல்(அலை) அவர்கள் சர்வ வல்லமை படைத்த(வனான இறைவ)னிடம் உயர்ந்தார்கள். (முதலில் நாம் நின்றிருந்த) அதே இடத்தில் நின்றவாறு நபி(ஸல்) அவர்கள், 'என் இறைவா! எங்களுக்காக (தொழுகைகளின் எண்ணிக்கையை) குறைத்திடுவாயாக! ஏனெனில், என் சமுதாயத்தாரால் இதை நிறைவேற்ற இயலாது'

என்றார்கள். அப்போது அல்லாஹ் அவர்களுக்குப் பத்து தொழுகைகளைக் குறைத்தான்.
பிறகு நபி(ஸல்) அவர்கள் மூஸா(அலை) அவர்களிடம் திரும்பி வந்தார்கள். மீண்டும் அவர்கள் நபி(ஸல்) அவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். அவ்வாறே மீண்டும் மீண்டும் நபி(ஸல்) அவர்களை இறைவனிடம் மூஸா(அலை) அவர்கள் திருப்பி அனுப்பிக் கொண்டேயிருந்தார்கள். முடிவில் அந்த (ஐம்பது) தொழுகை (நாள் ஒன்றுக்கு) ஐந்து தொழுகைகளாக மாறியதுழு ஐந்துக்கு வந்த போதும் மூஸா(அலை) அவர்கள் நபி(ஸல்) அவர்களைத் தடுத்து நிறுத்தி, 'முஹம்மதே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் என் சமுதாயத்தாரான பனூஇஸ்ராயீல்களுக்கு இதைவிடக் குறைந்த அளவிலான தொழுகையையே கோரிப்பெற்றேன். ஆனால் அவர்கள் (அதைக் கூட நிறைவேற்றாது) பலவீனமடைந்து கைவிட்டுவிட்டார்கள். உங்கள் சமுதாயத்தாரோ உடலாலும் உள்ளத்தாலும் மேனியாலும் பார்வையாலும் கேள்வியாலும் பலவீனமானவர்கள். எனவே, திரும்பச் சென்று உங்களுக்காக (உங்கள் ஐவேளைத் தொழுகைகளின் எண்ணிக்கையை) குறைத்துக் கேளுங்கள்' என்று கூறினார்கள்.
ஒவ்வொரு முறையும் நபி(ஸல்) அவர்கள் ஜிப்ரீல்(அலை) அவர்களிடம் யோசனை பெறுவதற்காக அவர் பக்கம் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவரும் அதை வெறுக்கவில்லை. ஐந்தாவது முறை ஜிப்ரீல்(அலை) அவர்கள் நபிகளாரை மேலே அழைத்துச் சென்றபோது நபி(ஸல்) அவர்கள், 'என் இறைவா! என் சமுதாயத்தார் உடலாலும், உள்ளத்தாலும், கேள்வியாலும், பார்வையாலும், மேனியாலும் பலவீனமானவர்கள். எனவே, (தொழுகைகளை) குறைத்திடுவாயாக!' என்று கோரினார்கள். அதற்கு சர்வ வல்லமை படைத்தவ(னான இறைவ)ன 'முஹம்மதே!' என்று அழைத்தான். அதற்கு 'இதோ இறைவா! நான் காத்திருக்கிறேன்; கட்டளையிடு' என்று பதிலளித்தார்கள்.
அதற்கு அல்லாஹ், '(ஒரு முறை சொல்லப்பட்ட) சொல் என்னிடம் மாற்றப்படுவதில்லை; அதை (-ஐவேளைத் தொழுகையை) நான் உங்களின் மீது 'லவ்ஹுல் மஹ்ஃபூல்' எனும் பாதுகாக்கப்பெற்ற பதிவேட்டில் கடமையாக(ப் பதிவு) ஆக்கிவிட்டேன். மேலும், ஒரு நற்செயலுக்குப் பத்து நன்மைகள் உண்டு. எனவே, அவை உங்களுக்கு ஐந்து நேரத் தொழுகைகளாக இருப்பினும், பாதுகாக்கப் பெற்ற பதிவேட்டில் அவை

ஐம்பது நேரத் தொழுகைகள் (உடைய நன்மைக்கு நிகர்) ஆகும்' என்று சொன்னான்.
பின்னர் நபி(ஸல்) அவர்கள், மூஸா(அலை) அவர்களிடம் திரும்பி வந்தார்கள். அப்போது 'என்ன செய்தீர்?' என்று மூஸா(அலை) அவர்கள் கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு (ஐம்பதாயிருந்த தொழுகைகளின் எண்ணிக்கையை ஐந்தாக) அவன் குறைத்தான். ஒவ்வொரு நற்செயலுக்கும் அதைப்போன்ற பத்து மடங்கு நன்மைகளை வழங்கினான்' என்றார்கள்.
அதற்கு மூஸா(அலை) அவர்கள், 'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதைவிடக் குறைவான எண்ணிக்கையையே பனூ இஸ்ராயீல்களுக்கு நான் (இறைவனிடம்) கோரிப் பெற்றேன். அப்படியிருந்தும் அதைக் கூட அவர்கள் கைவிட்டார்கள். நீங்கள் உங்களுடைய இறைவனிடம் திரும்பிச் சென்று இன்னும் உங்களுக்காகக் குறைக்கும்படி கேளுங்கள்' என்றார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'மூஸாவே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! திரும்பத் திரும்ப இறைவனிடம் நான் சென்றுவிட்டதனால் (மீண்டும் செல்ல) வெட்கப்படுகிறேன்' என்றார்கள். அப்போது ஜிப்ரீல்(அலை) அவர்கள், '(நபியே!) அல்லாஹ்வின் திருப்பெயரால் (பூமிக்கு) இறங்குங்கள்' என்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் விழித்தெழுந்தார்கள்; மஸ்ஜிதுல் ஹராம் புனிதப் பள்ளிவாசலில் இருந்தார்கள்.159
ஸஹீஹ் புகாரி : 7517.

இங்கே முதலாவது அல்லாஹ் முஹம்மதுவுக்கு 50 வேளை தொழுகையை கடமையாக்கி கொடுக்கிறான். அதை வாங்கி கொண்டு வரும்போது மூஸா முஹம்மதுவை பார்த்து "உங்கள் சமுதாயத்தினர்சமுதாயத்தினரால் இதை நிறைவேற்ற முடியாது, எனவே குறைக்கும்படி சொல்லுமாறு முஹம்மதுவிடம் சொல்கிறார். உடனே முஹம்மது அல்லாஹ்விடம் சென்று சொல்லும் போது 10 வேளை குறைத்து 40 ஆக்கி கொடுக்கிறார். மீண்டும் மூஸா முஹம்மதுவை பார்த்து குறைத்து வாங்கும் படி சொல்கிறார். இவ்வாறு தொடர்ந்து நடக்கிறது. கடைசியில் 5 வேளையாக மாறுகிறது. அதையும் குறைத்து வாங்கும்படி சொல்கிறார். அதை குறைக்கும் படி அல்லாஹ்விடம் முஹம்மது கேட்ட போது அல்லாஹ் சொல்லும் பதிலை கவனியுங்கள்: "ஒரு முறை சொல்லபட்ட சொல் என்னிடம் மாற்றப்படுவது இல்லை"

உங்கள் மீது 5 வேளை தொழுகையை மூல பதிவேட்டில் கடமையாக பதிவு செய்து விட்டேன்."  இவ்வாறு அல்லாஹ் முஹம்மதுவை பார்த்து சொன்னான் .  இங்கு சில சிக்கல்கள் உள்ளன.

1 ;~ அல்லாஹ் சர்வ ஞானியாக இருந்தால் ஆரம்பத்திலேயே 5 வேளை தொழுகையை கொடுத்து இருக்கலாமே. ஒரு மனிதன் அல்லாஹ் கொடுத்த கட்டளையை தவறு என்று சொல்ல வேண்டிய அவல நிலை எப்படி வந்தது?

2 ;~ 5 வேளை தொழுகையை குறைக்குமாறு முஹம்மது அல்லாஹ்விடம் சொன்ன போது  அல்லாஹ் மூஸாவை பார்த்து "ஒரு முறை சொல்லபட்ட சொல் என்னிடம் மாற்றபடுவது இல்லை"  என்கிறான். ஆனால் 50 வேளையாக கொடுக்கப்பட்ட அல்லாஹ்வின் சொல் பல முறை மாற்றபட்டு தான் கடைசியாக 5 வேளை வந்தது.  இது கூட தெரியாமல் தான் அல்லாஹ் இவ்வாறு பேசினானா?

3 ;~ குர்ஆனும் அல்லாஹ்வின் சொல் தான். அதில் உள்ள சில வசனங்கள் மாற்றபட்டு அதற்கு பதிலாக வேறு வசனங்கள் வந்துள்ளது. 2:106 .... ஆனால் இங்கே ஒருமுறை சொல்லி விட்டால் மாற்றபடுவது இல்லை என்கிறான். ஏன் இந்த முரண்பாடு

4 ;~ மூல பதிவேடும் மாற்றபடுவது தான் என்று அல்லாஹ் சொல்லி இருக்கிறான்

.........., எந்தத் தூதரும் அல்லாஹ்வின் அனுமதியில்லாமல் எந்த அத்தாட்சியையும் கொண்டுவந்ததில்லை; ஒவ்வொரு தவணைக்கும் ஒரு (பதிவு) ஏடு உள்ளது.
(அல்குர்ஆன் : 13:38)

(எனினும்,) தான் நாடியதை (அதிலிருந்து) அல்லாஹ் அழித்து விடுவான். (தான் நாடியதை அதில்) நிலைத்திருக்கவும் செய்வான் - அவனிடத்திலேயே உம்முல் கிதாப் (மூலப் பதிவேடும்) இருக்கிறது.
(அல்குர்ஆன் : 13:39)

அப்படியானால் மூல பதிவேட்டில் எழுதிவிட்டேன் என்ற படியால் மாற்ற முடியாது அல்லாஹ் என்று சொல்வதில் அர்த்தம் இல்லையே.,

ஆக அல்லாஹ்வுக்கு மூஸாவின் அறிவு கூட இல்லை என்பது மிக தெளிவான விஷயம் ஆகும்.

5 ;~ இறுதியாக 5 வேளை தொழுகையை கொடுத்து அல்லாஹ் முஹம்மதுவை அனுப்பும் போது  இன்னும் குறைக்க திரும்பவும் அல்லாஹ்விடம் போங்கள் என்று மூஸா சொல்கிறார்.  அப்படியானால் நமது கேள்வி என்னவென்றால்  அல்லாஹ் ஒரு சர்வ ஞானி என்ற அறிவு மூஸாவுக்கு இல்லையா?  என்னை விட அறிவு சட்டத்தை கொடுக்க இறைவனுக்கு இருக்காது என்று தான் மூஸா நினைத்தாரா? அப்படியானால் அது மிக பெரிய பாவம் இல்லையா?

யோசிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால்  மூஸா காரணத்தை சொல்லி குறைக்க சொல்லும் போது அதை ஏற்றுக்கொண்டு தன்னுடைய கட்டளையை திருத்திய அல்லாஹ்வை விட அதிக ஞானியாகவே மூஸாவை இந்த சம்பவம் காட்டுகிறது.

ஆனால் பைபிளில் உள்ள  இறைவனை பற்றி பைபிள் சொல்வதை பாருங்கள் ;~

14 தேவன் ஒருவிசை சொல்லியிருக்கிற காரியத்தை இரண்டாம்விசை பார்த்துத் திருத்துகிறவரல்லவே.
யோபு 33:14

3 ;~ *காபீருக்கு யோசிக்க தெரிந்தது கூட அல்லாஹ்வுக்கு தெரியலையா* ;~

முஹம்மது முதலாவது இறக்கிய குறிப்பிட்ட இரண்டு வசனங்களை பார்ப்போம்,

நிச்சயமாக நீங்களும், அல்லாஹ்வை அன்றி நீங்கள் வணங்கியவையும் நரகத்திற்கு விறகுகளே! நீங்கள் (யாவரும்) நரகத்திற்கு வந்து சேர்பவர்களே! (என்று அவர்களுக்குச் சொல்லப்படும்.)
(அல்குர்ஆன் : 21:98)

இவை தெய்வங்களாக இருந்திருந்தால், (அந் நரகத்திற்கு) வந்து சேர்ந்திருக்க மாட்டா; இன்னும் அனைவரும் அதில் நிரந்தரமாயிருப்பர்.
(அல்குர்ஆன் : 21:99)

இது மிகவும் தவறான வசனமாகும். காரணம் சிலர் சூரியனை வழிபடுகிறார்கள், சிலர் ஈஸாவை வழிபடுகிறார்கள், இன்னும் குறைஷிகளில் சிலர் லாத், மனாத், உஸா என்பவர்களை வழிபட்டு வந்தார்கள். மனிதன் தனது அறிவீனத்தால் அவைகளை வணங்கினால் அந்த காரணத்துக்காக அவைகள் எப்படி நரகில் போக முடியும் ?,

இதில் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் லாத் மனாத் உஸா என்பவைகள் வெறும் பெயர்கள் மட்டும்தானாம்.( 53 ; 9-21) அப்போ ஒன்றுமில்லாதிருக்கிறவைகள் எப்படி நரகில் போக முடியும் ?

இந்த வசனம் இறங்கி சிலமணி நேரம் தாண்டி அன்றைக்கு அப்துல்லாஹ் பின் அஸ்ஸிப அரா என்பவர் நான் மேலே குறிப்பிட்ட கேள்விகளை எழுப்பினார். அப்போது தான் முஹம்மதுவுக்கும் முஹம்மதுவின் இறைவனுக்கும் அறிவு உதித்து தான் இறக்கிய வசனம் தவறாக உள்ளது என்பதை அறிந்து அதை திருத்தும் விதமாக கீழே உள்ள வசனங்களை இறக்குகிறான்.,

நிச்சயமாக, எவர்களுக்கு நம்மிடமிருந்து (மறுமைப் பேற்றுக்கான) நன்மைகள் முன் சென்றிருக்கிறதோ, அவர்கள் அ(ந் நரகத்)திலிருந்து வெகு தொலைவில் இருப்பார்கள்.
(அல்குர்ஆன் : 21:101)

(இத்தகைய சுவர்க்கவாசிகள் நரகின்) கூச்சலைக் கேட்கமாட்டார்கள்; தாம் விரும்பும் இன்பத்திலேயே அவர்கள் என்றென்றும் நிலைத்திருப்பார்கள்.
(அல்குர்ஆன் : 21:102)

(இந்த சம்பவங்கள் இபின் கதீர் எழுதிய "அல்பிதாயா வந்நிஹாயா" என்னும் புத்தகத்தில் பாகம் 6, பக்கம் 80,81 ல் உள்ளது,)

இப்போ நமது முக்கியமான கேள்வி என்னவென்றால்

1 ;~"சர்வ ஞானி" என்று நம்பப்படும் அல்லாஹ்வுக்கு தான் முதலாவது இறக்கிய வசனம் தவறானது அல்லது பூரணமடையாதது என்று தெரியவில்லையா ? ஒரு மனிதன் தனது (அல்லாஹ்வின்) வசனங்கள் தவறானவை என்று சொல்லும்வரை அவருக்கு ஏன் அறிவு வரவில்லை ?

2 ;~ லாத் மனாத் உஸா என்பவைகள் வெறும் பெயர்களாகவே இருக்க அவைகளை மக்கள் வணங்கும்போது அவைகள் எப்படி நரகில் போக முடியும் ?

4 :~ *கருவறையில் நடப்பதும் மழை வருவதும் மனிதனுக்கு தெரியாதாம்*

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'
மறைவானவற்றின் திறவுகோல்கள் ஐந்தாகும். அவற்றை அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். (பெண்களின்) கருவறைகளில் ஏற்படும் குறைவை(யும் கூடுதலையும்) அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். நாளை என்ன நடக்கும் என்பதை அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். மழை எப்போது வரும் என்பதையும் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் (உறுதியாக) அறியமாட்டார்கள். எந்த உயிரும் தான் எந்த இடத்தில் இறக்கும் என்பதை அறியாது; அல்லாஹ் தான் அதை அறிவான். மறுமைநாள் எப்போது வரும் என்பது அல்லாஹ்வைத் தவிர வேறெவருக்கும் தெரியாது.
என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.10
ஸஹீஹ் புகாரி : 7379.
அத்தியாயம் : 97. ஓரிறைக் கோட்பாடு

5 ;~ *அல்லாஹ்வை விட மூஸா பெரியவர்* ;~

அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

உயிர் பறிக்கும் வானவர் ஒருவர் மூஸா(ரலி) அவர்களிடம் அனுப்பப்பட்டார். அவர் வந்தபோது மூஸா(அலை) அவர்கள் அவரின் கண் பிதுங்கும் அளவுக்கு அடித்துவிட்டார்கள். உடனே அவர் அல்லாஹ்விடம் போய், 'இறைவா! மரணிக்க விரும்பாத ஓர் அடியானிடம் நீ என்னை அனுப்பிவிட்டாய்' என்றார். பிறகு அல்லாஹ் அவரின் கண்ணைச் சரிப்படுத்திவிட்டு, 'நீர் மீண்டும் அவரிடம் சென்று, அவரை ஒரு மாட்டின் முதுகில் கையை வைக்கச் சொல்லி, அவரின் கை எத்தனை ரோமங்களை அடக்கிக் கொள்கிறதோ அத்தனை ஆண்டுகள் அவர் உயிர் வாழலாம் என்பதையும் கூறும்' என அனுப்பி வைத்தான். (அவ்வாறே அவர் மூஸா(அலை) அவர்களிடம் வந்து கூறியபோது,) மூஸா(அலை) 'இறைவா! அதற்குப் பிறகு?' எனக் கேட்டதும் அல்லாஹ், 'பிறகு மரணம் தான்' என்றான். உடனே மூஸா(அலை) அவர்கள் 'அப்படியானால் இப்பொழுதே (தயார்)' எனக் கூறிவிட்டு அல்லாஹ்விடம் (பைத்துல் முகத்தஸ் என்னும்) பூனிதத்தலத்திலிருந்து கல்லெறியும் தூரத்திலுள்ள (புனிதத் தலத்திற்கு மிக அருகிலுள்ள) இடத்தில் தம் உயிரைக் கைப்பற்றுமாறு வேண்டினார்கள். மேலும் நபி(ஸல்) அவர்கள் கூறும்போது, 'நான் மட்டும் இப்போது அங்கு (பைத்துல் முகத்தஸில்) இருந்தால் உங்களுக்கு அந்த செம்மணற் குன்றிற்கருகில் உள்ள பாதையிலிருக்கும் மூஸா(அலை) அவர்களின் கப்ரைக் காட்டியிருப்பேன்' எனக் குறிப்பிட்டார்கள்.
ஸஹீஹ் புகாரி : 1339.
அத்தியாயம் : 23. ஜனாஸாவின் சட்டங்கள்

1 ;~ மூஸா மலக்கை அடிப்பார் என்று ஏன் அல்லாஹ்வுக்கு தெரியாமல் போனது ?

2 ;~ 10:49, 63:11 ஆகிய வசனங்களில் ஒவ்வொரு உயிருக்கும் அல்லாஹ் ஏற்படுத்திய காலக்கெடு வந்துவிட்டால் அதில் எந்த மாற்றமும் செய்யப்படாமல் உடனே உயிர்கள் கைப்பற்றப்பட்டு விடும் என்று அல்லாஹ் கூறுகின்றான். ஆனால் இதற்கு மாற்றமாக மூஸா நபி அல்லாஹ்வின் விதியை நிறைவேற்ற வந்த மலக்கையே விரட்டி விடுகிறார்.

3 ;~ எவன் மலக்குகளுக்கு விரோதியாக உள்ளானோ அவன் காபீராக மாறிவிட்டான் என்று 2;98 சொல்கிறது. ஆனால் இங்கு மலக்கை தாக்கிய மூஸாவை எந்த கண்டிப்பையும் செய்யவில்லை. மாறாக அவர் சுவனத்தில் உள்ளார். மூஸாவை கண்டு அல்லாஹ்வுக்கு ஏன் இந்த பயம்?

4 ;~ 6:61, 21:27, 16:50, 66;6 ஆகிய வசனங்களில் அல்லாஹ் மலக்குகளுக்கு போட்ட கட்டளையை நிறைவேற்ற கூடியவர்கள் என்றும் அதில் குறைவைக்க மாட்டார்கள் என்றும் அல்லாஹ் கூறுகின்றான். ஆனால் இதை மூஸா முந்தி விட்டு அல்லாஹ்வின் கட்டளையை சுக்குநூறாக்கி விட்டார்.

6 ;~ *குகை வாசிகள் எத்தனை பேர் என்று அல்லாஹ்வுக்கு தெரியவில்லை.* ;~

யூதர்கள் முஹம்மதுவின் நபித்துவத்தை சோதிக்கும் படி மூன்று கேள்விகளை கேட்கும் படி குறைஷிகளிடம் சொன்னார்கள். அதில் ஒரு கேள்வி என்னவென்றால் ஆதிகாலத்தில் தமது சமூகத்தினரை விட்டுத் தனியே பிரிந்துபோன இளைஞர்கள் யார்? என்பதாகும். ( ibn kathir tafsir 18:1) இதற்கு அல்லாஹ் 18:9-22, 25-26 ஆகிய இடங்களில் பதில் கொடுக்கிறான். பதில் கொடுக்கும் போது அது உண்மை வரலாறாகவே நினைத்து பதில் கொடுக்கிறார். ஆனால் அது Syriac bishop Jacob of Serugh (c. 450-521), என்பவர் மூலமாக வந்த ஒரு கட்டுக்கதை ஆகும். இது கட்டுக்கதை என்பது கூட அல்லாஹ்வுக்கு தெரியாமல் போனது. சரி இதில் முக்கியமான விஷயத்தை பார்ப்போம். கீழே உள்ள வசனத்தை கவனமாக பாருங்கள்.

(அவர்கள்) மூன்று பேர் தாம்; அவர்களில் நான்காவது அவர்களுடைய நாய் என்று (சிலர்) கூறுகின்றனர்(இல்லை) அவர்கள் ஐந்து பேர் தாம்; - அவர்களில் ஆறாவது அவர்களுடைய நாய்" என்று மறைவானதை ஊகம் செய்து (சிலர்) கூறுகிறார்கள்; இன்னும் (சிலர்) "ஏழுபேர் - அவர்களில் எட்டாவது அவர்களுடைய நாய்" என்று சொல்கிறார்கள் - (நபியே!) அவர்களுடைய எண்ணிக்கையை என்னுடைய இறைவன் தான் நன்கறிவான்; சிலரைத் தவிர, மற்றெவரும் அவர்களைப் பற்றி அறிய

மாட்டார்கள்” என்று கூறுவீராக! ஆகவே, அவர்களைப் பற்றி வெளிரங்கமான விஷயம் தவிர (வேறெது பற்றியும்) நீர் தர்க்கம் செய்ய வேண்டாம்; இன்னும் அவர்களைக் குறித்து இவர்களில் எவரிடமும் நீர் தீர்ப்புக் கேட்கவும் வேண்டாம்.
(அல்குர்ஆன் : 18:22)

அந்த குகையில் ஒதுங்கியவர்கள் எத்தனைப் பேர்? என்ற கேள்விக்கு அல்லாஹ் தரும் பதில் இது தான் (இது பதிலா!?). சிலர் மூன்று பேர் என்றுச் சொல்கிறார்களாம், சிலர் ஐந்து பேர் என்றுச் சொல்கிறார்களாம், வேறு சிலர் ஏழு பேர் என்றுச் சொல்கிறார்களாம். கடைசி வரையிலும், எத்தனைப்பேர் என்று அல்லாஹ் கூட சொல்லவே இல்லை!.

அந்த குகையில் ஒதுங்கியவர்கள் எத்தனைப் பேர்? என்ற கேள்விக்கு அல்லாஹ் தரும் பதில் இது தான் (இது பதிலா!?). சிலர் மூன்று பேர் என்றுச் சொல்கிறார்களாம், சிலர் ஐந்து பேர் என்றுச் சொல்கிறார்களாம், வேறு சிலர் ஏழு பேர் என்றுச் சொல்கிறார்களாம். கடைசி வரையிலும், எத்தனைப்பேர் என்று அல்லாஹ் கூட சொல்லவே இல்லை!

ஆக அல்லாஹ்வுக்கு சர்வ ஞானம் இல்லை என்பது இந்த இடத்தில் மிக தெளிவான சான்றாக உள்ளது.

*குழப்பத்தில் இருக்கும் அல்லாஹ்* ;~1

*உமருக்கு தெரிந்தது அல்லாஹ்வுக்கு தெரியலையா?*

(அல்லாஹ்வுக்கு) இணைவைக்கும் பெண்களை-அவர்கள் நம்பிக்கை கொள்ளும் வரை- நீங்கள் திருமணம் செய்து கொள்ளாதீர்கள்; இணை வைக்கும் ஒரு பெண், உங்களைக் கவரக்கூடியவளாக இருந்தபோதிலும், அவளைவிட முஃமினான ஓர் அடிமைப் பெண் நிச்சயமாக மேலானவள் ஆவாள்; .......
(அல்குர்ஆன் : 2:221)

இந்த வசனத்தில் இணைவைக்கும் பெண்களை திருமணம் செய்ய கூடாது என்று தெளிவாக உள்ளது..... ஆனால்  வேதம் வழங்கபட்டோருடைய பெண்களை திருமணம் செய்யலாம் என்றும் அல்லாஹ் அப்புறம் சொல்கிறான் ;~

............முன்னர் வேதம் அளிக்கப்ட்டவர்களிலுள்ள கற்புடைய பெண்களும் விலைப் பெண்டிராகவோ, ஆசை நாயகிகளாகவோ வைத்துக் கொள்ளாது, அவர்களுக்குரிய மஹரை அவர்களுக்கு அளித்து, மண முடித்துக் கொள்வது உங்களுக்கு அனுமதிக்கப் பட்டுள்ளது; ........
(அல்குர்ஆன் : 5:5)

இதன் அடிப்படையில் கிறிஸ்த பெண்களை திருமணம் செய்யலாம் என்று அர்த்தம். காரணம் கிறிஸ்தவர்கள் வேதம் கொடுக்கபட்டவர்கள். வேதம் வழங்கபட்ட கிறிஸ்தவர்கள் ஈஸாவை வணங்குபவர்கள் ஆவர். அல்லது கடவுளுக்கு மகன் உண்டு என்று சொல்பவர்கள் ஆவர்கள். இதை செய்யாமல் ஒருவேளை அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டால் அவர்கள் அதன் பின்னர் கிறிஸ்தவர்கள் அல்ல, மாறாக முஸ்லிம்கள் ஆவர்கள். அப்படி இருக்கும் போது கிறிஸ்தவ பெண்களை திருமணம் செய்ய சொல்லுவது அல்லாஹ்வின் குழப்பத்தை இங்கே நாம் தெளிவாக பார்க்கலாம்.

இதற்கு ஆதாரமாக இப்னு உமர் சொல்வதை பாருங்கள் ;~

நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்
( ஒரு முஸ்லிம்) கிறிஸ்துவப் பெண்ணையோ அல்லது யூதப் பெண்ணையோ மணந்துகொள்வது தொடர்பாக இப்னு உமர்(ரலி) அவர்களிடம் வினவப்பட்டால், அவர்கள் 'இறைநம்பிக்கையாளர்கள் இணைவைக்கும் பெண்களை மணமுடித்துக கொள்வதை அல்லாஹ் அனுமதிக்கவில்லை. அல்லாஹ்வின் அடியார்களில் ஒருவரான ஈசா(அலை) அவர்களைத் தன்னுடைய இறைவன் என்று ஒரு பெண் கூறுவதைவிட மிகப் பெரிய இணைவைப்பாக வேறொன்றையும் நான் அறியவில்லை' என்பார்கள்.
ஸஹீஹ் புகாரி : 5285.
அத்தியாயம் : 68. மணவிலக்கு (தலாக்)

உமருடைய பார்வையில் கூட கிறிஸ்தவர்கள் என்றால் இணைவைப்பாளர்கள் என்பது தெளிவு. ஆனால் இந்த அறிவு ஏன் அல்லாஹ்வுக்கு இல்லாமல் போனது? அல்லது அல்லாஹ் ஏன் இப்படி குழம்புகிறான் ?.... இப்படி குழம்புகிறவன் எப்படி இறைவனாக இருக்க முடியும்?

*குழப்பத்தில் இருக்கும் அல்லாஹ்* ;~2

*தான் யாரென்றே தெரியாத அல்லாஹ்* ;~

இஸ்லாத்துக்கு முன்பும் அல்லாஹ் குறைஷிகளின் கடவுளாக இருந்ததாக சொல்வதை பாருங்கள் ;~

“நீங்கள் அறிந்திருந்தால், இப் பூமியும் இதிலுள்ளவர்களும் யாருக்கு(ச் சொந்தம்?“ என்று (நபியே!) நீர் கேட்பீராக!
(அல்குர்ஆன் : 23:84)

“அல்லாஹ்வுக்கே” என்று அவர்கள் கூறுவார்கள்; .......
(அல்குர்ஆன் : 23:85)

“ஏழு வானங்களுக்கு இறைவனும் மகத்தான அர்ஷுக்கு இறைவனும் யார்?” என்றும் கேட்பீராக.
(அல்குர்ஆன் : 23:86)

“அல்லாஹ்வே” என்று அவர்கள் சொல்வார்கள்; ......
(அல்குர்ஆன் : 23:87)

“வானங்களையும், பூமியையும் படைத்தவன் யார்? என்று அவர்களிடம் நீர் கேட்பீராயின் அவர்கள், “அல்லாஹ்” என்றே நிச்சயமாக சொல்லுவார்கள்; அல்ஹம்து லில்லாஹ் - எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே” என்று நீர் கூறுவீராக; எனினும், அவர்களில் பெரும்பாலோர் அறியமாட்டார்கள்.
(அல்குர்ஆன் : 31:25)

மேலே உள்ள வசனங்களில் மிக தெளிவாக குறைஷிகள் வணங்கும் கடவுளாக தான் அல்லாஹ் இருந்தார் என்பது தெளிவு. ஆனால் இதற்கு நேர் முரணாக குறைஷிகள் வணங்கிய கடவுளை நான் வணங்கவில்லை என்று சொல்ல சொல்லும் அல்லாஹ் ;~

(நபியே!) நீர் சொல்வீராக: காஃபிர்களே!
(அல்குர்ஆன் : 109:1)

நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்கமாட்டேன்.
(அல்குர்ஆன் : 109:2)

இன்னும், நான் வணங்குகிறவனை நீங்கள் வணங்குகிறவர்களல்லர்.
(அல்குர்ஆன் : 109:3)

அன்றியும், நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்குபவனல்லன்.
(அல்குர்ஆன் : 109:4)

மேலும், நான் வணங்குபவனை நீங்கள் வணங்குபவர்கள் அல்லர்.
(அல்குர்ஆன் : 109:5)

அதாவது குறைஷிகள் அல்லாஹ்வை வணங்கினால் முஹம்மது அல்லாஹ்வை வணங்க மாட்டாராம்.

இதிலிருந்து அல்லாஹ் தன்னையே மறந்து பேசுகிறான் என்பது தெளிவு

பைபிள் அடிப்படையில் ஒருவன் பொய்யன் என்பதற்கு அவனுடைய பேச்சுக்களை வைத்தே கண்டுபிடிக்க முடியும் என்று பைபிள் சொல்கிறது. ;~

2 *நீ உன் வாய்மொழிகளால் சிக்குண்டாய், உன் வாயின் வார்த்தைகளால் பிடிபட்டாய்.*

நீதிமொழிகள் 6

இந்த வசனத்தின் அடிப்படையில் சில குறிப்புகளை பார்ப்போம் ;~

*குர்ஆன் தீர்க்கதரிசனத்தின் படி விஷத்தின் பாதிப்பினால் இறந்த முஹம்மது* ;~

குர்ஆனில் உள்ள முன்னறிவிப்பை பார்ப்போம் ;~

அன்றியும், நம்மீது சொற்களில் சிலவற்றை இட்டுக் கட்டிக் கூறியிருப்பாரானால் -
(அல்குர்ஆன் : 69:44)

அவருடைய வலக்கையை நாம் பற்றிப் பிடித்துக் கொண்டு-
(அல்குர்ஆன் : 69:45)

பின்னர், அவருடைய நாடி நரம்பை நாம் தரித்திருப்போம்.
(அல்குர்ஆன் : 69:46)

இங்கே நாடி நரம்பு என்பது இருதய இரத்த குழாயை குறைக்கிறது. சரி இனி முஹம்மதுவுக்கு இவ்வாறு நடந்ததா என்று பார்ப்போம் ;~

ஆயிஷா(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, 'ஆயிஷாவே! கைபரில் (யூதப் பெண்ணொருத்தியால் விஷம் கலந்து தரப்பட்ட) அந்த உணவை நான் உண்டதால் ஏற்பட்ட வேதனையை நான் தொடர்ந்து அனுபவித்து வருகிறேன். அந்த விஷத்தின் காரணத்தால் என் இருதய இரத்தக்குழய் அறுந்து போவதை நான் உணரும் நேரமாகும் இது' என்று கூறினார்கள்.
ஸஹீஹ் புகாரி : 4428.
அத்தியாயம் : 64. (நபிகளார் காலத்துப்)போர்கள்

கைபரில் ஒரு பெண் கொடுத்த விஷத்தின் பாதிப்பு காரணமாக வேதனை அதிகமாகி இருதய இரத்தக் குழாய் அறுபட்டு முஹம்மது இறந்தார்.

அதற்கான கூடுதல் ஆதாரங்களை பார்ப்போம் ;~

...... (யூத பெண் கொடுத்த ஆட்டுக்கறியினால் ) நபி(ஸல்) அவர்களின் தொண்டைச் சதையில் அந்த விஷத்தின் பாதிப்பை நான் தொடர்ந்து பார்த்து வந்தேன்.
ஸஹீஹ் புகாரி : 2617.
அத்தியாயம் : 51. அன்பளிப்பும் அதன் சிறப்பும்

................,....அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் உள்நாக்குச் சதையில் அ(ந்த விஷத்தின் அடையாளத்)தை நான் தொடர்ந்து பார்த்துவந்தேன்........
-
ஸஹீஹ் முஸ்லிம் : 4408.

நபி(ஸல்) அவர்களின் மரண வேதனை அதிகமானபோது '................
ஸஹீஹ் புகாரி : 114.

அப்துல்லாஹ்(ரலி) அறிவித்தார்.
நபி(ஸல்) அவர்களுக்கு வேதனை அதிகமானபோது
ஸஹீஹ் புகாரி : 682.

நபி(ஸல்) அவர்களுக்கு நோய் அதிகமாம் வேதனை கடுமையானபோது, என்னுடைய வீட்டில் தங்கி சிகிச்சை பெறுவதற்காகத் தங்கள் இதர மனைவிகளிடம் அவர்கள் அனுமதி கேட்டதற்கு அவர்களும் அனுமதி வழங்கினார்கள்.
ஸஹீஹ் புகாரி : 198.
அத்தியாயம் : 4. உளூச் செய்வது

இங்கே அந்த விஷத்தின் காரணமாக வலி அதிகமான போது முஹம்மது சிகிச்சை எடுத்தாக பார்க்கலாம். அப்போது முஹம்மதுவின் மனநிலை என்னவென்றால் எப்படியாவது இந்த வலியிலிருந்து விடுதலை ஆக வேண்டும் என்ற எண்ணத்தில் தான் காணபட்டது. ஆனால் பைபிள் வசனத்தின் படி முஹம்மது சிக்கினார். கடைசி வரை அந்த வலி குறையவே இல்லை.

வேதனை அதிகமான போது குர்ஆனை ஓதிய ஆயிஷா ;~

ஆயிஷா(ரலி) கூறினார்
நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது (குர்ஆனில் உள்ள) பாதுகாப்புக் கோரும் (இறுதி மூன்று) அத்தியாயங்களை ஓதித் தம் (உடல்) மீதே ஊதிக்கொள்வார்கள். அவர்களுக்கு நோய் கடுமையானபோது நான் அவற்றை ஓதி அவர்களின் மீது ஊதிக் கொண்டும் அவர்களின் கையின் சுபிட்சம் (பரக்கத்) கருதி அதைக்கொண்டே (அவர்களின் மேனியை) தடவிக் கொடுததுக் கொண்டும் இருந்தேன்.

ஸஹீஹ் புகாரி : 5751.
அத்தியாயம் : 76. மருத்துவம்

முஹம்மதுவின் வேதனையை பற்றி ஆயிஷா கூறுவதை பாருங்கள் ; ~

முஹம்மது நபியை போல வேதனையை அனுபவிக்கும் வேறு யாரையும் நான் கண்டதில்லை

Ibn majah hadith 1622

இந்த கடுமையான வலியிலேயே மரிக்க போகிறேன் என்று சொன்ன முஹம்மது ;~

அதற்கு அவர்கள், 'என்னிடம் நபி(ஸல்) அவர்கள் இரகசியமாக, (அப்போது) தமக்கு ஏற்பட்டிருந்த அந்த (நோயின்) வலியிலேயே தாம் இறக்கவிருப்பதாகத் தெரிவித்தார்கள். அதனால், நான் (துக்கம் தாளாமல்) அழுதேன். ........
ஸஹீஹ் புகாரி : 3626.
அத்தியாயம் : 61. நபி(ஸல்) அவர்களின்) சிறப்புகள்

ரஹீக் பக்கம் 448 ;~

கைபர் போரின் போது உட்கொண்ட உணவில் கலக்கபட்ட விஷத்தின் விளைவை நபி உணர ஆரம்பித்தார்கள். ஆயிஷாவே கைபர் தினத்தில்

நான் உண்ட உணவின் வேதனையை அனுபவித்து கொண்டு இருக்கிறேன். இந்த நேரத்தில் அந்த விஷத்தினால் எனது நரம்புகள் துண்டாவதை நான் உணருகிறேன் .

இது எனது பெருநாடி நரம்பு துண்டிக்கபடும் நேரமாகும் இது

அபூதாவுத் 4513

அப்போது அவர் இறந்த வலி குறித்து கூறியதாவது:: கைபரில் நான் உண்ட விஷத்தின் வலியை நான் தொடர்ந்து உணர்ந்தேன். இது என் பெருநாடியை துண்டித்த நேரம்

அபு தாவூது 4512

ஆக கள்ள தீர்க்கதரிசியாக இருந்தால் என்ன தண்டனை கிடைக்கும் என்று குர்ஆன் சொன்னதோ அதே தண்டனை முஹம்மதுவின் மரண நேரத்தில் நடைபெற்றது. ஆக முஹம்மது சொன்ன இறைவன் உண்மையான இறைவன் ஆக மாட்டான்.

*சூனியத்தால் பாதிக்கப்பட்ட முஹம்மது* ;~

நீங்கள் நேர்வழியைப் பின்பற்றுவீர்களானால், வழி தவறியவர்கள் உங்களுக்கு ஒரு தீங்கும் செய்ய முடியாது. ......
(அல்குர்ஆன் : 5:105)

முஹம்மது மனித தீங்கினால் பாதிக்கபட்டால் அவர் நேர்வழியில் இல்லை என்று அர்த்தம்.

இனி முஹம்மது மனித தீங்காகிய சூனியத்தால் பாதிக்கப்பட்ட ஆதாரங்களை பார்ப்போம் ;~

3268 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குச் சூனியம் வைக்கப்பட்டது. எந்த அளவிற்கென்றால் அவர்கள் ஒரு செயலைச் செய்யாமலிருக்க, அதைச்

செய்தது போன்று அவர்களுக்கு பிரமையூட்டப்பட்டுக் கொண்டே இருந்தது..... புகாரி 3268

3268 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குச் சூனியம் வைக்கப்பட்டது. எந்த அளவிற்கென்றால் அவர்கள் ஒரு செயலைச் செய்யாமலிருக்க, அதைச் செய்தது போன்று அவர்களுக்கு பிரமையூட்டப்பட்டுக் கொண்டே இருந்தது..... புகாரி 3268

5763 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு பனூஸுரைக் குலத்தைச் சேர்ந்த லபீத் பின் அஃஸம் என்பான் சூனியம் செய்தான். இதையடுத்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தாம் செய்திராத ஒன்றைத் தாம் செய்து கொண்டிருந்ததாகப் பிரமையூட்டப்பட்டார்கள்.

5765 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குச் சூனியம் செய்யப்பட்டது. அதையடுத்து அவர்கள் தம் துணைவியரிடம் செல்லாமலேயே அவர்களிடம் சென்று வருவதாக நினைக்கலானார்கள்.

இதிலிருந்து முஹம்மது நேர்வழியில் இல்லை என்பது நிரூபணம் ஆகியுள்ளது.... அப்படியானால் முஹம்மதுவின் இறைவனும் உண்மையான இறைவன் இல்லை

*நிறைவேறாமல் போன அல்லாஹ்வின் வாக்குறுதிகள்* ;~

தூதரே! உம் இறைவனிடமிருந்து உம்மீது இறக்கப்பட்டதை (மக்களுக்கு) எடுத்துக் கூறிவிடும்; (இவ்வாறு) நீர் செய்யாவிட்டால், அவனுடைய தூதை நீர் நிறைவேற்றியவராகமாட்டீர்; அல்லாஹ் உம்மை மனிதர்களி(ன் தீங்கி)லிருந்து காப்பாற்றுவான்; .....
(அல்குர்ஆன் : 5:67)

இங்கே முஹம்மதுவை மனித தீங்கிலிருந்து பாதுகாப்பேன் என்று அல்லாஹ் சொல்கிறான். ஆனால் முஹம்மது மனிதன் வைத்த தீங்கினால் பாதிக்கபட்டார்

மனிதன் வைத்த சூனியம் ;~ புகாரி 3268, 5763, 5765

யூத பெண் வைத்த விஷத்தினால் பாதிக்கபட்டார் ;~ புகாரி 4428, 2617, முஸ்லிம் 4408,

*முஹம்மதுவின் இறைவன் சைத்தானா* ;~

திடமாக, நாம் மனிதனை மிகவும் அழகிய அமைப்பில் படைத்தோம்.
(அல்குர்ஆன் : 95:4)

இங்கு மனிதனை அல்லாஹ் நல்ல அமைப்பில் படைத்தாக உள்ளது. இனி கீழே உள்ள வசனத்தை பாருங்கள் ;~

.,......... இன்னும் அல்லாஹ்வின் படைப்புகளையுடைய கோலங்களை மாற்றும்படியும் ஏவுவேன்” என்றும் ஷைத்தான் கூறினான்; எனவே எவன் அல்லாஹ்வை விட்டு ஷைத்தானை உற்ற நண்பனாக ஆக்கிக் கொள்கிறானோ, அவன் நிச்சயமாக பகிரங்கமான பெரு நஷ்டத்தை அடைந்தவன் ஆவான்.
(அல்குர்ஆன் : 4:119)

அல்லாஹ் படைத்த கோலத்தை மாற்றும்போது ஏவுவது சைத்தான் என்று இந்த வசனம் சொல்கிறது. ஆனால் முஹம்மது சுன்னத் செய்து அல்லாஹ்வின் படைப்பின் கோலத்தை மாற்ற சொல்கிறார். அப்படியானால் முஹம்மதுவின் இறைவன் சைத்தான் என்பது மிக தெளிவு.

*நிறைவேறாமல் போன அல்லாஹ்வின் சாபம்* ;~

அவர்கள், எங்கிருப்பினும் அவர்கள் மீது இழிவு விதிக்கப்பட்டுள்ளது; அல்லாஹ்விடமிருந்தும், மனிதர்களிடமிருந்தும் அவர்களுக்கு(ப் பாதுகாவலான) ஒப்பந்தமின்றி (அவர்கள் தப்ப முடியாது); அல்லாஹ்வின்

கோபத்தில் அவர்கள் சிக்கிக் கொண்டார்கள்; ஏழ்மையும் அவர்கள் மீது விதிக்கப்பட்டு விட்டது; இது ஏனென்றால், நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வின் ஆயத்களை நிராகரித்தார்கள்; அநியாயமாக நபிமார்களை கொலை செய்தார்கள்; இன்னும் அவர்கள் பாவம் செய்து கொண்டும் (இறையாணையை ) மீறி நடந்து கொண்டும் இருந்ததுதான் (காரணமாகும்). (அல்குர்ஆன் : 3:112)

யூதர்கள் அல்லாஹ்வின் சாபத்திலிருந்து விடுதலை பெற வேண்டுமானால் அல்லாஹ்விடமும் மனிதர்களிடமும் ஒப்பந்தம் செய்ய வேண்டும் என்று சொல்ல பட்டுள்ளது. ஆனால் யூதர்கள் அல்லாஹ்விடம் ஒப்பந்தம் போடாமலேயே நல்ல நிலையில் உள்ளார்கள்.